நாஞ்சில் நாட்டு

# மருமக்கள்வழி மான்மியம்

கவிமணி

**சி. தேசிகவிநாயகம் பிள்ளை**

இயற்றியது

**பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை**

எழுதிய முன்னுரையுடன் கூடியது.



பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை ·

# நாஞ்சில் நாட்டு

# மருமக்கள்வழி மான்மியம்

கவிமணி

சி. தேசிகவிநாயகம் பிள்ளை

இயற்றியது.

பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை
எழுதிய முன்னுரையுடன் கூடியது.



பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600108

முதற் பதிப்பு : நவம்பர், 1942
இரண்டாம் பதிப்பு : பிப்ரவரி, 1951
மூன்றாம் பதிப்பு : மார்ச்சு, 1965
நான்காம் பதிப்பு ; மே, 1970
ஐந்தாம் பதிப்பு : ஆகஸ்டு, 1974
ஆறாம் பதிப்பு : அக்டோபர், 1978
ஏழாம் பதிப்பு : நவம்பர், 1982
எட்டாம் பதிப்பு : 1988

விலை ரூ. 10-00



அச்சிட்டோர் :
முவேந்தர் அச்சகம்,
இராயப்பேட்டை
சென்னை-600 014.

# பொருளடக்கம்

# முன்னுரை

## 1

'நாஞ்சில் நாடு' இப்போது திருவிதாங்கூர் இராச்சியத்தின் தெற்குப் பகுதியாயுள்ளது. பெரும் புகழ் பெற்ற 'குமரி' இந்நாட்டினகத்தேதான் இருக்கிறது.[1] இந்நாட்டினர் அனைவரும் தமிழார்வம் மிக்கவர்களாகவே உள்ளவர்கள். இன்றும் இந்நாட்டில் தமிழ் மொழியே வழங்கி வருகிறது. இன்றிருப்பது போலவே சுமார் 1800 ஆண்டுகட்கு முன்பும் தமிழ் கூறு நல்லுலகத்தின் பகுதியாகவே இந்நாடு விளங்கிற்று. தொல்காப்பியத்தின் பாயிரத்தில்,

**''வடவேங்கடம் தென்குமரி**
**ஆயிடைத்**
**தமிழ்கூறு நல்உலகத்து''**

என வருவதைக் கொண்டு மேற்கூறியதன் உண்மை தெளியலாம். இப் பாயிரத்தில் வரும் அதங்கோட்டாசான், குமரிக்கருகிலுள்ள திருவிதாங்கோடு என்னும் ஊரினர் என்பதும் இங்கே மனங்கொளத்தக்கது.

1. முன்னுரை எழுதிய காலத்து இருந்த நிலை இது. இப்போது கன்னியாகுமரி மாவட்டமாகத் தமிழ்நாட்டின் ஒரு பகுதியாக உள்ளது.

பாண்டியனுக்குரியதாகக் 'குமரிச் சேர்ப்பன்' என் ஒரு பெயர் திவாகரத்தில் காணப்படுகிறது. இ பெயரால், இந் நாடு தொன்றுதொட்டுப் பாண்டிய னுக் குரியதாயிருந்தமை புலனாம். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் குறித்த அச்சமும் புகழும் தெற்கின்கண் உள்ள கன்னிக்குத் தெற்கும் பரவுக வென அப் பாண்டியனைக் காரிகிழார் என்ற புலவ பாடுகிறார் (புறம் 6). பாண்டியனுக்கு உரியதாகவே குமரியை அடுத்துள்ள பஃறுளியாறுங் கூறப்பட் டுள்ளது (புறம் 9). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் குறித்து,

> "தென்குமரி வடபெருங்கல்
> குணகுட கடலா எல்லைத்
> தொன்று மொழிந்து தொழில் கேட்ப" (70-72)

என மதுரைக் காஞ்சி என்ற நூல் கூறுகிறது. இங்கே 'தொன்று மொழிந்து' என்பது, 'மிகவும் பழங்காலந் தொட்டுத் தொடர்புடையராயுள்ளமையைப் பாராட்டிச் சொல்லி' எனப் பொருள்படுதலாலே, பாண்டியர்களுக்கு அநாதியாகவே தென்குமரியைச் சார்ந்த நாடு உடைமை யாயிருந்ததென்பது விளங்கும்.

பாண்டியர் பரம்பரைக் குரியதாயிருந்த இந்நாடு, சங்க காலத்தில்தானே சேரர்களால் பல முறை அபகரிக்கப்பட்டதெனப் புறநானூற்றாலும் (17), பதிற்றுப்பத்தினாலும் அறிகிறோம். பிற்குறித்த நூலில்,

> "ஆரியர் துவன்றிய பேரிசை இமையந்
> தென்னங் குமரியொடு ஆயிடை
> மன்மீக் கூறுநர் மறம்பதக் கடந்தே" (11)

எனவும்,

''வடதிசை யெல்லை இமைய மாகத்
தென்னங் குமரியொடு ஆயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ'' (43)

எனவும் வரும் அடிகள், குமரியைச் சார்ந்த நாட்டைச் சேரர்கள் வென்று அடிப்படுத்தினர் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன.

நாஞ்சில் என்ற பெயரும் சங்ககாலத்தில் வழங்கி வந்த தொன்றேயாம். புறநானூற்றிலே,

''உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந' (139)

என வருகின்றது. இங்கே 'உழாஅ நாஞ்சில்' என்பது 'பாயா வேங்கை', 'பறவாக் கொக்கு' என்பனபோல. உழுதல் செய்யாத நாஞ்சில், அஃதாவது நாஞ்சில் என்னும் மலையெனப் பொருள் படுகின்றது. இது மலையேயாம் என்பது 'உயர்சிமைய' (உயர்ந்த சிகரத்தையுடைய) என்ற அடையால் உணரலாகும். இப்பழம்பெரு நூலின் உரைகாரரும், 'நாஞ்சில் என்னும் பெயரையுடைய மலைக்கு வேந்தே' என்று இவ்வடிக்குப் பொருள் கூறினர். நாஞ்சில் மலையைத் தன்னகத்தே கொண்ட நாடு 'நாஞ்சில் நாடு' ஆகும். இந்நாட்டிலே வீரத்தாற் சிறந்து விளங்கிய வள்ளுவன் என்னும் பெயருடையான் ஒருவன் சங்க காலத்தில் வாழ்ந்தனன். இவனைக் குறித்துப் புறநானூற்றில் ஐந்து செய்யுட்கள் (137, 138, 139, 140, 380) உள்ளன. இவற்றுள் நான்கு செய்யுட்களில், இவன் 'பொருநன்' என்றே சிறப்பிக்கப்படுகிறான். இவன் பெருங்கொடை வள்ளலாகவும் விளங்கியவனென்பது பாணாற்றுப்படையாகப் பாடப்பெற்ற 138ஆம் செய்யுளால் தெளியலாம்.

இவன் ஒரு வேந்தனுக்குப் படைத்துணையாய் அமைந் தவனென்பது,

> ''ஈதல் ஆனான் வேந்தே வேந்தற்குச்
> சாதல் அஞ்சாய் நீயே'' (139)

என, இவனது வேந்தனையும் இவனையுங் குறித்து வரும் அடிகளால் அறியலாகும். இவ்வேந்தன் சேரன் என உரைகாரர் கூறுவர். ஆனால் 380ஆம் புறப்பாட்டு இவனைத் 'தென்னவர் வயமறவன், என விசேடிக் கின்றது. 'தென்னவர்' என்பது பாண்டியரையே சிறப்பாக உணர்த்துமாதலால், பாண்டியனே இவனது வேந்தனெனத் துணிதல் வேண்டும். 'சாதல் அஞ்சாய்' என்ற தொடரை நோக்கும்போது, பிற்காலத்து அமைக்கப்பெற்ற சாவேறு என்னும் வீரர் தொகுதி யினரைப் போல், இவ்வள்ளுவன் சிறந்து மேம்பட்டவ னெனக் கருதுதல் தக்கதாகலாம்.

சங்ககாலத்துக்குப் பின் சுமார் 250 ஆண்டுகளாக (கி. பி. 650 வரை) நாஞ்சினாட்டுப் பகுதி சேரர்களது ஆட்சிக்குட்பட்டிருந்ததென ஊகித்தற் கிடமுண்டு. ஏனெனின், திருஞான சம்பந்த சுவாமிகளது காலத்தவ ரான நெடுமாறர் சேர அரசனோடு கோட்டாற்றிலும் விழிஞத்திலும் போர் செய்தனரெனப் பாண்டிக்கோவை அறிவிக்கின்றது. கோட்டாறு மதில் முதலியவற்றால் நன்கு காவல் செய்யப்பட்ட ஒரு நகரமாக முற்காலத்தில் இருந்தது. அங்கே ஒரு பெரும்போர் நிகழ்ந்தது. அதனருகில், விழிஞத்தில் கடலிடையே போரொன்றும் நிகழ்ந்தது. 'விண்டார்பட 'விழிஞக் கடற் கோடியுள்' என்று கூறப்படுகின்றது. (இறை. உரை. செய். 30•) இப் போரில் சேரனைக் காட்டகத்து வெருட்டி

---

• இங்கே காட்டுவது பவானந்தர் கழகப் பதிப்பு

யோட்டி (செய். 37) அவனது தென்னாட்டை நெடுமாறர் கைக் கொண்டார் (செய். 239). இங்ஙனம் கொண்டு நாடு, எவ்வளவு காலம் வரையில் மீண்டும் பாண்டியர் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததென அறியக்கூட வில்லை. நாஞ்சினாட்டுக்கு இயற்கை அரணாக அமைந்த மலைத் தொடராலும் பிற இடையூறுகளா லும் பாண்டியர்களுக்குத் தாம் கைப்பற்றிய நாட்டைக் காப்பாற்றுதல் அரிதாயிருந்திருத்தல் வேண்டும். ஆகவே, அவர்களிடமிருந்து சேர அரசர்கள் தாமத மின்றி நாஞ்சினாட்டை மீண்டும் பெற்றனரென்றுதான் ஊகித்தல் ஆகும். 10 ஆம் நூற்றாண்டிலிருந்து 13ஆம் நூற்றாண்டு இறுதியாகச் சோழ அரசர்கள் தென்னாட்டரசர்களில் தலைமை பூண்டனர்; அக் காலத்து சேர வமிசத்தினரிடமிருந்து சோழரிடம் நாஞ்சினாடு கைம்மாறியது. முதற் பராந்தகன், கேரளாந்தகன் என்னும் விருதுடைய முதற் ராஜராஜன், இவர்களுடைய சாசனங்கள் நாஞ்சினாட்டில் பல இடங் களிலும் காணப்படுகின்றன. வீரசோழியம் இயற்று வித்த வீரராஜேந்திரசோழன் (கி. பி. 1062) கேரளனை வென்றதாக ஒரு சாசனங் கூறுகின்றது. முதற் குலோத்துங்கன் (கி. பி. 1070-1118).

> “ ‘கன்னியுங் கைக்கொண்டு புனிதத் தென்னாட்டு
> எல்லை காட்டிக் குடமலைநாட் டுள்ள
> சாவேறு எல்லந் தனிவிசும்பு ஏற
> குறுகலர் குலையக் கோட்டாறு உட்பட
> நெறிதொறும் நிலைகளிட்டு அருளி’னன்”

எனப் பிறிதொரு சாசனம் தெரிவிக்கின்றது. இரண் டாங் குலோத்துங்கன் காலத்தும், மூன்றாம் ராஜராஜன் காலத்தும், சோழரது ஏகாதிபத்தியத்துக்கு இந்நாடு உட்பட்டிருந்ததென்றும் சாசனங்கள் உணர்த்துகின்

றன. இங்ஙனம் உட்பட்டிருந்தமையால், கோட்டாற்றிற்கு 'மும்முடிச் சோழபுரம்' என்றும், பின்னர் 'சோழ கேரளபுரம்' என்றும், புதிய பெயர்கள் உண்டாயின. கன்னியாகுமரியில், தேவியைக் குறிக்க நேரிடும் சாசனங்களில் 'ராஜராஜப் பாண்டி நாட்டு உத்தமசோழ வளநாட்டுப் புறத்தாய நாட்டுக் குமரிக் கன்னியா பகவாதியார்' என வருகின்றது. நாஞ்சினாடு உத்தம சோழ வளநாட்டின் பிரிவாகவே ஒரு சாசனத்தில் (T. A. S. I. 163) கூறப்பட்டிருக்கிறது. சாசனங்களிற் காணும் நாட்டுப் பெயர்களுள் இந் நாஞ்சினாடு என்ற பெயரொழிய அதனோடியைந்த ஏனைப் பெயர்களெல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டன.

சோழ வம்சம் வலி குன்றியொழியவே, சேர அரசர்கள் மீண்டும் நாஞ்சினாட்டுப் பிரதேசத்தைக் கைப்பற்றியாளத் தொடங்கினர். இங்ஙனம் ஆளத்தொடங்கியது, கி. பி. 15ஆம் நூற்றாண்டின் முதற் பகுதியாயிருக்கலாமெனத் தோன்றுகிறது. சேர அரசர்கள் தங்கள் உரிமையை நாட்டியபோதிலும், பாண்டியநாடு முதலியவற்றை ஆண்டுவந்த விஜயநகரப் பேரரசர்களின் பிரதிநிதிகளாலும், மதுரைப் பிரதேசத்தை யாண்ட நாயக்க அரசர்களாலும் அடிக்கடி அல்லற்பட்டனர். படையெடுப்புக்கள் நிகழ்ந்த வண்ணமாயிருந்தன. நாஞ்சினாட்டுக்கும் திருநெல்வேலிக்கும் இடைப்பட்ட பிரதேசம் அடிக்கடி கைம்மாறி வந்தது. இப்பிரதேசத்தைத் 'திருவடி தேசம்' என்று சாசனங்கள் குறிப்பதிலிருந்து, இது நீண்ட காலமாகச் சேர அரசர்கள் கைவசமிருந்ததெனக் கருத வேண்டியதாயிருக்கிறது. ஆனால் விஜயநகரப் பிரதிநிதிகளுள் விட்டலராயர் முதலியோரும், நாயக்கர் சேனாதிபதியான ராமப்பய்யன் முதலியோரும், திருவடி தேசத்தின் உட்பகுதிக்கே

படையெடுத்துச் சென்று, தங்கள் அரசரின் பெருமையை நிலைநாட்டினர். நாயக்கர் படை கொல்லம் 810 முதல் (கி. பி. 1635) நாஞ்சினாட்டை மிகவும் துன்புறுத்தியது என்றும், இதுபோன்ற காரணங்களால், கொல்லம் 849 முதல் 869 வரை, நிலவரி முதலியன நீக்கப்பட்டன என்றும் முதலியார் ஓலைச் சாசனமொன்று தெரிவிக்கின்றது. கி. பி. 1700க்குப் பின்தான் நாஞ்சினாட்டில் சிறிதளவு சமாதானம் ஏற்பட்டதென்று சொல்லலாம். ஆனால், உள்நாட்டுக் கலகங்களும் திப்புசுல்தானது படையெடுப்பால் வந்த வித்துக்களும், நாஞ்சினாட்டினருக்குப் பெருந்துன்பம் விளைத்தன. இதுவும் நீங்கிக் கடந்த நூறு ஆண்டுகளாகத்தான் நாடு அமைதி பெற்றிருக்கிறது.

II

மேலே விவரித்த சரித்திரத்தால் நாஞ்சினாட்டினரின் நிலை மிகவும் வருந்தத் தக்கதாயிருந்தமை எளிதின் அறியத்தகும். அவர்களிற் பல குடும்பத்தினர் பல நூற்றாண்டுகட்கு முன்னே அங்கே குடியேறியவர்கள்; ஒருசில குடும்பத்தினர் சோழர் படையெடுப்போடு வந்தவர்களாயிருக்கலாம்; இன்னும் ஒருசில குடும்பங்கள் அதற்கு முன்பு அங்கு வந்து சேர்ந்தனவாகக்கூட இருக்கலாம்; சிலர் பூர்வக் குடிகளும் இருக்கலாம்; ஆனால் பெரும்பாலோர் பாண்டிய நாடு சோணாடுகளிலிருந்து சென்றவர்களேயாவர். நாஞ்சினாட்டினர் பொதுப்பட இங்ஙனமிருப்ப, அந்நாட்டு வேளாளர் அனைவரும் வெளிநாடுகளிலிருந்து பல நூற்றாண்டுகட்கு முன்பு அங்கே குடியேறிப் படைத் தலைமை பூண்டும் படை வீரராயமைந்தும் நாட்டின் ஆட்சி முறையில் அதிகாரம் வகித்தும் வந்தவர்களே. இவர்கள்

நாஞ்சினாட்டில் பெருநிலக்கிழமை பூண்டும் இருந்தனர். பாண்டி முதலிய பிரதேசங்களிலிருந்து வரும் படைகளைத் தடுத்தும், நாட்டின் ஆட்சியில் அதிகாரம் தாங்கி அரசியல் செவ்வையாக நடைபெறுவதற்கு உதவிபுரிந்தும், உழவு வாணிபம் முதலிய தொழில்களை மேற்கொண்டு நாட்டின் நலத்தைப் பேணியும் பெருந் தொண்டு புரிந்து வந்தனர். சேர அரசர்களுக்கு இன்றியமையாத பெருங் குடிகளாயமைந்தனர். அரசியல் நடைபெறுவதற்கு வேண்டும் பொருள் வருவாய் பெரும்பாலும் இந்நாஞ்சினாட்டினரிடமிருந்தே பெறக்கூடியதாயிருந்தது. சுருங்கக் கூறின், சேர ராஜ்யத்தின் உயிர் நிலையாயிருந்து, அரசு செழிக்கும் படி செய்தது நாஞ்சினாடாகும்.

ஆனால், நாஞ்சினாட்டினர்—முக்கியமாக நாஞ்சினாட்டு வேளாளர்—எப்பொழுதும் தங்கள் தாயகமாகிய சோழ பாண்டிய தேசங்களையே நோக்கிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய வழக்கவொழுக்கங்களெல்லாம் பாண்டி நாட்டிலுள்ள வேளாளர்களுடைய வழக்கவொழுக்கங்கள். அவர்களுடைய குடும்பத் தெய்வங்கள் பாண்டிநாடு முதலிய இடங்களில் இருந்தன. அவர்களுடைய கொள்வினை கொடுப்பு வினையெல்லாம் பாண்டி முதலிய நாட்டினரோடு நிகழ்ந்தன. அவர்கள் தாய்மொழி தமிழ்; அவர்கள் போற்றி வந்த இலக்கியங்கள் தமிழிலக்கியங்கள்; அவர்களுடைய ஆசாபாசமனைத்தும் அப்பாண்டி முதலிய நாடுகளோடு பின்னிக் கிடந்தன. இந்த நிலையில், அவர்களைத் தமது நாட்டு நிலைக் குடிகளாகச் செய்துவிட வேண்டுமென்று ஒரு சேர அரசர் எண்ணியது முற்றும் இயல்பன்றோ?

இதற்கேற்ப கர்ண பரம்பரைச் செய்தியொன்று நாஞ்சினாட்டு வேளாளரிடை வழங்குகிறது. அவர்கள் தங்களுடைய பூர்விக நாட்டிற்குப் போய்விடாதபடி ஒரு சேர அரசன் மருமக்கள்தாயச் சட்டத்தை அவர்கள் மேற்கொள்ளும்படி செய்தானென்பதுதான் இக்கர்ண பரம்பரை. இந்தச் செய்தி உண்மையாயின் இது அரியதோர் அரசியற் சூழ்ச்சியாகும். வேறொரு செய்தியும் வழங்குகின்றது. பாண்டியனொருவனுக்கும், சேரனொருவனுக்கும் இந்நாஞ்சினாட்டின் உரிமையைப் பற்றி விவாதம் நிகழ்ந்தது.

''வஞ்சி நாடதனில் நன்செய் நாடுஎனச்
செந்தமிழ் வழங்குந் தேயமொன்று உளது; அதன்
அந்தம்இல் பெருவளம் அறியார் யாரே?
மருதமும் நெய்தலும் மயங்கி அங்கெங்கும்
புரையறு செல்வம் நிலைபெற வளரும் (i. 75-79)

* * *

''இப்பெருந் தேயத்து எங்கும் இராப்பகல்
தப்பினும் மாரி தன்கடன் தவறா
கொண்மூ என்னுங் கொள்கலங் கொண்ட
அமிழ்தினை அவ்வயிற் கவிழ்த்தபின் செல்வுழி
வடியும் நீரேநம் மிடிதீர் சாரல் (II. ii. 101-105)

* * *

''தூவியால் தம்முடல் நீவிடிற் சிரிக்குஞ்
சிறுமியர் என்னஅச் செந்நில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனங் கூசி
உடல்குழைந்து எங்கும் உலப்பறு செல்வப்
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் நல்குவள்
(II. ii 140-144)

* * *

**"எங்கட்கு அந்நாடு உரித்தாம்! அங்குப்**
**பரவு பாடையும் விரவும் ஆசாரமும்**
**நோக்கில் வேறொரு சாக்கியம் வேண்டா"**

**(II. iii. 77-79)**

என்று மனோன்மணீயம் கூறுமாறு பாண்டியன் தன் கட்சியை எடுத்துரைத்தனன். மேலும் பாண்டியன் அணை என்பதும், நாஞ்சினாட்டினர் மக்கள் தாயிகளா யிருத்தலும், அந்நாடு தனக்குரியதேயென்பதை வலி யுறுத்துகின்றன என்றனன். பாண்டியன் ஒருவனது நட்பின் ஞாபகார்த்தமாகச் சேர அரசனொருவனாற் பாண்டியன் அணை கட்டப்பெற்றதென்றும், நாஞ்சி னாட்டினர் மருமக்கள் தாயிகளே என்றும் வஞ்சியர் பூபதி வாதித்தனன். முடிவில் நாஞ்சினாட்டினர் மக்கள் தாயிகளா அல்லது மருமக்கள் தாயிகளா என்பதைப் பொறுத்ததாயிற்று இவ்வுரிமை விவாதம். இதனை அந் நாட்டினரே தீர்க்க வேண்டியதாயிற்று. அவர்கள் எக்காரணத்தாலோ சேரர்குடிகளாய் வாழ்தலை விரும்பி னர். இவ்விருப்பத்திற்கிணங்கத் தாங்கள் மருமக்கள் தாயிகளே என்றும், அத் தாயமுறையைத் தங்கள் முன் னோர்கள் மேற்கொண்டுவிட்டார்களென்றும் சான்று கூறி, விவாதத்தை முடித்தனர். இது நிகழ்ந்தது கொல்லம் 292ம் ஆண்டில் (அதாவது கி. பி. 1116) என்று, ஸ்ரீபத்மநாப சுவாமி கோயிலிலுள்ள ஓர் ஓலைப் பத்திரம் தெரிவிக்கிறதெனத் திருவிதாங்கூர்த் தேசச் சரித்திரம் (Travancore State Manual) கூறுகிறது.*

இங்கே கூறிய இரு செய்திகளாலும், அநாதியாக மக்கள் தாய முறையைக் கொண்ட நாஞ்சினாட்டு

---

*கலைமகள் 1,585 பார்க்க, இங்குக் குறிப்பிட்ட காலம் சோழரது ஆதிக்க காலம்; ஆதலால் இக்காலக் குறிப்பு ஐயப் பாட்டிற்கிடனாயுள்ளது.

வேளாளர், அரசியற் காரணங்கள் பற்றி மருமக்கள்—தாய முறையைக் கைப்பற்றின ரென்பது உறுதியாகின்றது. பிற்கூறிய தாய முறையின் முக்கியாம்சங்கள் மிகவும் விசித்திரமானவை. ஒரு காரணவனது பூர்விகச் சொத்து அவனது சகோதரியின் குழந்தைகளுக்குத் தாயமுறைப்படி இறங்கும். அவனுடைய குழந்தைகளுக்கு 'உகந்துடைமை' என்னப்படும் ஒரு சிற்றுரிமையைத் தவிர, வேறு யாதொரு பாத்தியத்தையும் இல்லை. சகோதரியின் குழந்தைகளுக்கும் பூர்விகச் சொத்தைப் பாகப் பிரிவினை கேட்க உரிமையில்லை. இந் நிலையில் தன் குழந்தைகள் ஒரு பக்கமும், தன் சகோதரிகளின் குழந்தைகள் ஒரு பக்கமுமாகக் காரணவனை அரித்துத் தின்பதுதான் நாஞ்சினாட்டுக் குடும்பத்தின் சாதாரண கதியாய்விட்டது. இயற்கையான அன்பு தன் குழந்தைகள்மீது செல்ல, செயற்கையான சட்டம் அவ் அன்பிற்கு இடங்கொடாதபடி, தன் சகோதரிகளின் குழந்தைகளுக்கு அவகாசிகள் நிலையிற் குடும்பச் சொத்தைக் கொடுக்கும்படி செய்தது. சகோதரிகளின் குழந்தைகளுக்குச் 'சேஷகாரர்' என்று பெயர். இவர்களின் இதம்போல் காரணவன் நடக்கத் தவறினால், அவனைக் 'குடும்பதோஷி' என்று கூறிக் காரண ஸ்தானத்திலிருந்து நீக்க வேண்டும் வழி தேடுவார்கள். இதனால் எப்போதும் கோர்ட் விவகாரம்தான். குடும்பச் சொத்தை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று காரணவன் நினைப்பதற்கு இடமே இல்லாமற் போய் விட்டது. குடும்பச் சொத்தும் பாழாகும் நிலையில் வந்துவிட்டது. நாஞ்சினாட்டிலுள்ள பெருங் குடும்பங்களிற் பெரும்பாலன இவ்வாறாக அல்லற்பட்டுத் தவித்துக் கொண்டிருந்தன.

நாஞ்சினாட்டுப் பெண்களின் துன்பம் சொல்லி அளவிட முடியாது. பலதாரங்களை ஒருவன் மணந்து

கொள்ளலாம். இங்ஙனம் பலருள் ஒருத்தியாய் வாழ்வது நாஞ்சினாட்டில் சர்வ சாதாரணமாய்ப் போயிற்று. கணவன் இறந்த பிற்பாடு மறுமணம் செய்துகொள்ளும் உரிமை விதவைக்கு இருந்தது. இவ்வுரிமையால் பெண்மக்களின் அல்லற்பாடு மிகுந்ததேயன்றிக் குறைவுபடவில்லை. தான் மணந்த மனைவியை ஆதரித்துக் காப்பாற்ற வேண்டுமென்ற பொறுப்பைக் கணவன் அவ்வளவாக மேற்கொள்ளவில்லை. சேஷகாரர்களுக்குக் காரணவனுடைய மனைவி மக்களைக் கவனிக்க வேண்டும் பொறுப்புச் சிறிதும் இல்லை. இவ்வாறான பல குறைகளினால் பெண்களின் நிலைமை பெரிதும் பரிதபிக்கத் தகுந்ததாயிருந்தது.

இந்நிலைமைகளையெல்லாம் நோக்கி, தங்களுக்குரிய அவகாசக் கிரமம் பற்றிச் சட்டத்தை மாற்றியமைக்க வேண்டுமென்ற கருத்து, நாஞ்சினாட்டில் முற்போக்கில் அவாவுள்ள மக்கள் மனத்தில் தோன்றிற்று. இக் கருத்து 30 ஆண்டுகட்கு முன்னர் மிகவும் பிரசாரமெய்தியது. முற்போக்கில் ஈடுபடாத ஒரு சிலர் இதனை ரகசியமாக எதிர்க்கத் தலைப்பட்டனர். நாஞ்சினாடு இரு பிளவு பட்டது. ஆனால் முற்போக்காளரே முடிவில் வென்றனர்.

ஸ்ரீ. சி. தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் முற்போக்காளரில் முதன்மை பெற்றவர். 'மலபார் குவார்ட்டர்லி ரிவியூ' என்ற பத்திரிகையில், இவர்கள் நாஞ்சினாட்டு வேளாளரைக் குறித்து எழுதிய ஆங்கிலக் கட்டுரை, அதுகாறும் உறங்கிக் கிடந்த வேளாளரின் கண்களைத் திறந்து விழிக்கச் செய்தது. பிள்ளையவர்களுடைய தூய உள்ளமும் சீரிய நோக்கமும் மனத்தைக் கவர்ந்தன. நாஞ்சினாட்டு வேளாள சமுதாயம் பலவகை இன்னல்களும் நீங்கி, அதற்குரிய உயரிய நிலையை

அடையவேண்டுமென்ற ஆழ்ந்த உணர்ச்சி அவர்களுடைய சம்பாஷணைகளிலும் எழுத்திலும் பிரதிபலிக்கத் தொடங்கியது. அவர்கள் தமிழ் — இலக்கியங்களில் ஊறியவர்கள்; தமிழ் மக்களுடைய சரிதத்தை நன்குணர்ந்தவர்கள்; தமிழர்களுடைய உயர்ந்த லட்சியங்களிலும் ஒழுக்க நியதிகளிலும் ஈடுபட்டவர்கள்; ஆங்கிலக் கவிஞர்களின் அறிவுரைகளில் திளைத்தவர்கள்; பிற சமுதாயச் சரித்திரங்களை ஊன்றி நோக்கியுணர்ந்தவர்கள்; நாஞ்சினாட்டு இளைஞர்களுக்கு ஒரு லட்சிய புருஷராக உள்ளவர்கள்; ஆடம்பரம் சிறிதும் இல்லாதவர்கள்; ஆதலால் பிரசங்க மேடைகளிலோ பிரசங்கக் கூட்டங்களிலோ அவர்களைக் காணுதல் அரிது. ஆனால், அமைதியோடும் உள்ளுணர்ச்சியோடும் தங்கள் சமுதாய நன்மையின் பொருட்டு இடைவிடாது உழைத்து வந்தார்கள். அவர்கள் உழைப்பில் சுயநலமென்பது சிறிதும் இருப்பதற் கிடமேயில்லை. தூய வாழ்க்கையுடையவர்கள்; சந்தானம் அற்றவர்கள்; எனவே அதுபற்றிய பாசபந்தங்களும் அற்றவர்கள்; இல்லறத்தேயிருந்தும் துறவியே.

**" அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது.** (45)

என்ற வள்ளுவர் குறளுக்கு லட்சியமாயுள்ளவர்கள். எப்பொழுதும் கல்வியிலும் ஆராய்ச்சியிலும் கவித்வ நிவேதனத்திலும் வாழ்ந்து வருபவர்கள். தாம் ஆற்றவேண்டும் அரிய முதற் கடமையாகும் என்று நினைத்தே, தமது சமுதாயச் சீர்திருத்தத்திலும் சட்டச் சீர்திருத்தத்திலும் பிள்ளையவர்கள் முனைந்தார்கள்.

இச்சந்தர்ப்பத்தில், நான் திருவனந்தபுரத்தில் பிள்ளையவர்கள் அருகில் வசித்து வந்தேன். ஆதலால்

இங்கே எழுதுவனவெல்லாம் எனக்கு நேரில் தெரிந்தவையே. சட்டத்தைச் சீர்திருத்தும் விஷயமாகப் பல நண்பர்களும் பிள்ளையவர்களைக் கண்டு கலந்து கொண்டு சென்றார்கள். ஸ்ரீ மூலம் பிரஜாஸபையின் அங்கத்தினர் பலர் பிள்ளையவர்கள் கூடவே தங்கியிருந்து, சட்ட விஷயமாக விவாதித்துப் பரிசீலனை செய்து வந்தார்கள். தமது சமுதாயத்தினர்கள் சுய நலத்தின் காரணமாகச் சீர்திருத்தத்திற்கு இணங்காமற் போய்விடுவார்களோ என்ற கவலை பிள்ளையவர்களுக்கு இருந்தது. இக்கவலை மனத்திற் பட்டவுடன், 'நாஞ்சினாட்டு வேளாளருக்கு ஒரு கோட்டை வினாக்கள்' முதலிய பல துண்டுப் பத்திரங்களை வெளியிட்டார்கள். சமுதாயத்தின் பரிதாபகரமான நிலையைச் சித்திரித்துக் காட்டினால், தம்மவர்கள் உண்மையுணர்ந்து, சீர்திருத்த விஷயத்தில் ஒருமுகமாய் உழைப்பார்கள் என்று பிள்ளையவர்கள் கருதினார்கள். இதுதான் நாஞ்சினாட்டு மருமக்கள்வழி மான்மியத்தின் உற்பத்தியாகும்.

## III

பிள்ளையவர்கள் வரைந்த சமுதாயச் சித்திரம் ஒரு நூதன இலக்கிய வகையை நமது தமிழ் மக்களுக்குக் கொடுத்தது. இவ் இலக்கிய வகையில் நகைப்பும் இகழ்ச்சியும் சோகமும் ஒன்றாகக் கலந்து வரும். பெரியதோர் பயனும் விளைவதாகும்.

மக்களுக்கு நகைப்பு உணர்ச்சியும் இகழ்ந்துரையாடலும் இயல்பாகவுள்ளவையே. ஏதாவதொரு வகையிற் பொருத்தமற்ற மொழி அல்லது செயல் நிகழ்ந்தவிடத்து நகையுண்டாகும். இலக்கண நூலார் நகைச்சுவை இன்னின்ன காரணங்களாற் பிறக்குமென்று

அறுதியிட்டு உரைப்பர். அக்காரணங்களை இங்கே ஆராய வேண்டும் அவசியம் இல்லை. ஐந்து வயசுப் பையன் மிகப் பெரியதொரு தலைப்பாகை கட்டிக் கொண்டு வயது முதிர்ந்தவன்போல் நடிப்பானானால் பார்ப்பவர்களுக்கு உடனே நகைப்பு வந்துவிடும். இப்படியே மிக்க ஆடம்பரமாகச் சட்டை முதலியன அணிந்துகொள்பவன் அடிசறுக்கிக் கீழே விழுவானானால் உடனே நகைப்பு உண்டாய்விடும். பேச்சிலும் இப்படி நகையுண்டாவதற்குரிய சந்தர்ப்பங்களை எளிதில் பாவித்துக் கொள்ளலாம். ஆடுசாபட்டி அஷ்டாவதானம் அம்மையப்ப பிள்ளை, தம் வீட்டில் திருடர்கள் புகுந்து களவாடிக் கொண்டிருக்கும்போது, அவர்களைப் பார்த்து 'நீவிர் பிழைத்தீர் இனிப் பிழையூர்' என்று கூறுதலும், இதற்குப் பதிலாகத் திருடர்கள் அவரை அடிக்கச் செல்லுவதும் நகையுணர்ச்சியைத் தோற்றுவிக்காதபடி இருக்க முடியுமா? இவ்வுணர்ச்சியை எழுப்பக்கூடிய நூல்கள் தமிழில் பல இருக்கின்றன. பம்மல் சம்பந்த முதலியாரவர்கள் இயற்றிய 'சபாபதி' என்னும் நாடகம் நகைச்சுவையிலே தோய்ந்திருக்கிறது. வில்லியப்ப பிள்ளையின் பஞ்ச லட்சணத் திருமுக விலாசம் நகைச்சுவையின் பொக்கிஷமாகவுள்ளது. வீரமா முனிவரின் பரமார்த்த குரு கதையில் நகைச்சுவை ததும்புகிறது. கம்பராமாயணம் முதலிய காவியங்களிலும் அங்கங்கே நகைச்சுவை குமிழிட்டெழுகிறது. சங்கச் செய்யுட்களிலும் ஏகதேசமாய் இந்த நகைச்சுவை தலைகாட்டி இன்பமூட்டுகிறது. உதாரணமாக,

"திருந்திழாய் கேளாய் நம் ஊர்க்கெல்லாம் சாலப்
பெருநகை அல்கல் நிகழ்ந்தது"

என்ற கலித்தொகையைக் (65) காண்க; பத்திரிகை யுலகிற்கூட நகைச்சுவை புகுந்துவிட்டது. இக் காலத்தே தமிழ்நாட்டில் நகைச்சுவை மலிந்த பத்திரி கைகளே இருபாலராலும் போற்றப்படுகின்றன. ஹாஸ் யத்தையே பெரும்பான்மை மக்கள் பெரிதும் விரும்பு கிறவர்கள் என்பதையுணர்ந்து, சினிமாப்படக் கர்த்தர் களும் இந்தச் சுவையுடைய கதைகளையே படம் பிடிக் கின்றனர். ஆனால் இங்கே கூறிய நகைச்சுவைப் பகுதி யெல்லாவற்றிலும் ஆழ்ந்த உணர்ச்சி இல்லை; ஆழ்ந்த பொருளில்லை; நிலைத்த பயனில்லை. கணநேர மகிழ்ச்சியையே நமக்குத் தந்து அதனோடு ஒழிகிறது.

இகழ்ச்சிச் செயலும் இவ்வாறுதான், விருப்பு வெறுப்பு மக்களியற்கையில் ஒன்றிக் கிடப்பவையே. வெறுப்பின் உருவ வேறுபாடே இகழ்ச்சி யென்பது. நமது தினசரி வாழ்க்கையில் இவ்இகழ்ச்சி அடிக்கடி புலப்படுவதொன்றே. இலக்கியங்களிலும் இது மிகுதி யாகக் காணப்படுகின்றது. தமக்குப் பொருள்கொடாத ஒருவரைக் குறித்து, ஒரு புலவர்,

**''பாரி ஓரி நள்ளி எழினி**
**ஆஅய் பேகன் பெருந்தோள் மலையன் என்று**
**எழுவருள் ஒருவனும் அல்லை; அதனால்**
**நின்னை நோவது எவனோ?**
**அட்டார்க்கு உதவாக் கட்டிபோல**
**நீயும் உளையே நின்அன் னோர்க்கே;**
**யானும் உளனே தீம்பர லோர்க்கே;**
**குருகினும் வெளியோய் தேளத்துப்**
**பருகுபால் அன்னஎன் சொல்உகுத் தேனே!''**

(தொல்—செய்யுளியல் 125, உரை)

என்று பாடுகிறார். வசைக்கூத்து என்ற நூலொன்றும் முற்காலத்து இருந்ததாகத் தெரிகிறது, கம்பராமா

யணத்தில் பல இடங்களிலும் இவ் இகழ்ச்சியுரை மிக்க திறம்படக் கையாளப்படுகிறது. உதாரணமாக, இராவணனை நோக்கி அனுமன்,

**"அஞ்சலை யரக்க பார்விட்டு அந்தரம் அடைந்தா னன்றே**
**வெஞ்சின வாலி மீளான் வாலும்போய் விளிந்த தன்றே**
**அஞ்சன மேனி யான்தன் அடுகணை யொன்றால் மாழ்கித்**
**துஞ்சினன் எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல்**
**என்றான்."**

(கம்ப. சுந்தர. பிணிவீட்டு. 84)

இகழ்ந்து பாடுதலையே தமது தொழிலாகக் கொண்டு அவ்வகைப் பாடலில் சிறந்து விளங்கியவர் காளமேகம் என்று கூறுவர்.

**"கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்**
**அத்தமிக்கும் போதில் அரிசிவரும்—குத்தி**
**உலையிலிட ஊரடங்கும் ஓரகப்பை யன்னம்**
**இலையிலிட வெள்ளி எழும்."**

என்பது அவர் பாடல்களில் ஒன்று.

மேற்காட்டியன போன்ற இகழ்ச்சியுரைகளெல்லாம் யாரேனும் ஒருவரைக் குறித்துத் தோன்றியவை. கண நேரந் தோன்றும் மனவேறுபாட்டுக்கு ஒரு போக்கிடமா யமைந்தவை; பொருள் அற்றவை; நன்மை அற்றவை; வசையென்ற அளவில் நல்லுணர்வுடையோரால் கொள்ளத் தகாதவை.

இகழ்ச்சியுரை வசையாக மாத்திரம் அமையாதபடி குற்றத்தைக் கண்டித்து நீக்குதலையே உண்மையான நோக்கமாகக் கொண்டதாயின், அப்போது அவ் இகழ்ச்சி ஒருபடி உயர்ந்துவிடுகிறது. புராதன லத்தீன் ஆசிரியர்களுள் லூஸில்லஸ் என்பவர்தாம் இந்நோக்கத்தை முதன் முதற் கையாண்டவர் எனக் கூறு

கிறார்கள். இகழ்ச்சிக் கண்டனம் ஒருவரைக் குறித்துத் தோன்றாது ஓரினத்தவரைக் குறித்து எழுமாயின், அதனால் விளையும் நன்மை மிகப் பலவாதற்கு இட முண்டு. இனம்பற்றி யெழும் இகழ்ச்சியுரையின் தோற்றுவாய் 'ஹோமர்' என்ற கிரேக்க மகாகவியின் சிருஷ்டிகளில் காணப்படுகிற தென்பர். கம்ப ராமா யணத்தில் அது வெளிப்படும் திறம் கவனிக்கத்தக்கது. இராவணன் முதலிய அரக்கர்களால் அடிமைப்படுத்தப் பட்டவர்கள் இந்திரன் முதலிய தேவர்கள். இத் தேவர்களின் ஏழைமை நிலை பல இடங்களிலும் வெளிப் படுகிறது. இலங்கையைச் சூழ்ந்திருந்த பொழிலுக்கு இவர்கள் காவற்காரராயிருந்தனர். இப் பொழில் அழிந் ததைப் பற்றியும், பஞ்ச சேனாதிபதிகள், அக்ஷய குமாரன் முதலானவர்களின் வதத்தைப் பற்றியும் இராவணனுக்கு அறிவிக்கும் பொறுப்பு இவ் ஏழைத் தேவர்களுக்கு ஏற்பட்டது. இராவணன் சமூகத்திற்கு, அவர்கள் உள்ளம் பறைகொட்ட நடுநடுங்கி வருதலும், அவனிடம் சொல்லுவதற்கு அஞ்சி தடுமாறும் நிலைமை யும், நகைச்சுவைபட, இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற, வருணிக்கப்படுகின்றன. அடிமை வாழ்வின்மீது ஏற்படும் அருவருப்பு தேவஜாதியாரின்மீது ஏற்றி யுணர்த்தப்படுகிறது. இதனால் விளையும் சுவையும் பயனும் பெரிதும் போற்றத்தக்கவை.

இராமாயணத்தில் வருவது பழங்காலச் சரித்திரத் தில் ஓர் ஆழ்ந்த உண்மை. ஓர் ஆசிரியன் தன் காலத்து வாழ்ந்த சில இனத்தாரைப் பரிகசித்து இகழ்வதுதான் மிகுதியாகக் காணப்படுகிறது. இவ்வாறு இகழப் படுவதற்குப் பெரும்பாலும் பெண்ணினத்தார்களும், துறவு வேடம் பூண்டவர்களுமே தக்கவர்கள் ஆவார் களென்று ஆசிரியர்கள் கருதினார்கள்.

பெண்களுடைய நடையுடை பாவனைகளையும், அவர்களுடைய சாகசத்தினையும், அறிவு நுட்பத்தினையும், 'அளக்கவொண்ணா வஞ்சத்'தினையும் பற்றிப் பல நூல்கள் ஆங்கிலத்தில் முற்காலத்தில் வெளியிடப்பட்டுள்ளன. உதாரணமாக, தாமஸ் டெக்கர் என்னும் கவிஞர் எழுதிய 'பிரம்மசாரியின் விருந்து' (Bachelor's Banquet) என்ற நூலைக் கூறலாம். நமது நாட்டில் பெண்களைப் பழித்துரைத்தலே பிற்காலத்தில்—ஜைன பௌத்த மதங்கள் ஓங்கி நின்ற காலத்தில்—பெரு வழக்கமாக ஏற்பட்டுவிட்டது.

''புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்புற நாடின் வேறு அல்ல—புதுப்புனலும்
மாரி அறவே அறுமே அவரன்பும்
வாரி அறவே அறும்'' (370)

என்ற நாலடிச் செய்யுளும்,

''உண்டியுட் காப்புஉண்டு உறுபொருட் காப்புஉண்டு
கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புஉண்டு
பெண்டிரைக் காப்பது இலமென்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே''

என்ற வளையாபதிச் செய்யுளும் தக்க உதாரணங்களாம். இங்ஙனமே ஒரு பௌத்த பிக்ஷுவையும் ஒரு காபாலிகனையும் 'மத்த விலாஸ ப்ரஹஸநம்' என்ற வடமொழி நாடகம் பரிகசிக்கிறது. வள்ளுவரும்,

''தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்'' (1073)

எனவும்,

''வஞ்ச மனத்தான் படிற்றுஒழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்'' (271)

எனவும் கயவர்களையும் கூடாவொழுக்கமுடைய துறவிகளையும் குறித்துக் கூறுகிறார்.

இங்ஙனம் பெண்டிர், பொய்த்துறவிகள் முதலாகிய இனத்தினர்களை இகழ்ந்துரைப்பதிலே அவர்கள் திருந்த வேண்டுமென்ற நோக்கமும் ஏற்பட்டுவிட்ட தாயின், அவ் இகழ்ந்துரை நம்மைச் சூழ்ந்துள்ள தீங்கு கள், அறியாமை முதலியவற்றை நீங்குவதற்கு ஏற்ற நற்கருவியாகிவிடுகிறது. இகழ்ச்சியினால் உண்டாகக் கூடும் மனக்கசப்பு, அவ் இகழ்ச்சியோடு உடனொன்றி வரும் நகைச்சுவையினால் மாறிவிடுகிறது. நன்மை பெருகுதற்குத் தக்க வாய்ப்பு ஏற்படுகிறது. கோபத்தி னால் கொறுகொறுக்கும் ஒருவன் முகத்திற்கெதிரே கண்ணாடியைக் காட்டுவதுபோன்ற பயன் விளை கிறது. ஆகவே, நகைப்பு, இகழ்ச்சி, நன்னோக்கம் ஆகிய மூன்றும் இயைந்துவரும் சரளகாவியமொன்றே தமது கருத்திற்கு ஒத்ததெனப் பிள்ளையவர்கள் துணிந் தார்கள். இச்செய்யுள் வகையை ஆங்கிலத்தில் 'ஸட்டயர்' (Satire) என்று கூறுவார்கள். தொல் காப்பியர் 'அங்கதம்' வசையொடும் நகையோடும் கூடியது என்று கூறி, அது 'செம்பொருள்-அங்கதம்', 'பழிகரப்பு-அங்கதம்' என இருவகைப்படும் என்றனர் (செய்-129, 124). ஒருகால் இது 'பழிகரப்பு-அங்கதம்' என்றதில் அடங்கலாம். ஆனால், இதைப் பிரகசனம் என்று சொல்வது மிகப் பொருத்தமாகும்.

பிரகசனத்தின் இயல்பை நாம் நன்குணர்தல் வேண்டும். மக்களில் ஒரு பகுதியார் தாம் கையாண்டு வரும் ஒழுக்கங்களும் பழக்க வழக்கங்களும் நல்லவை யென்று கொண்டு, அவைபற்றித் தமக்குள் தாமே திருப்தியடைந்திருப்பார். அவ்வாறு திருப்தியாயிருந்

தால் தவறென்றும், அவ்வொழுக்க முதலியன திருந்துதல் அவசியமென்றுங் காட்டி நல்வழிப்படுத்துதலே பிரகசனத்தின் நோக்கமாகும். உண்மையைச் சிறிது மிகைப்படுத்திக் கூறுதல் இவ்வகை நூல்கள் மேற்கொள்ளும் பொதுமுறையாகும்.

இப்பிரகசனம் இருவகை நெறியிலே செல்லலாம். ஒன்று, பண்பட்ட அமைதி நெறி; நல்லியற்கையினின்றும் தவறாத நெறி. இந்நெறியிலே பிரகசனத்தின் அடிப்படையில் நீதி உள்ளடங்கிக் கிடக்கும். ஆசிரியன், தான் பரிகசிக்கும் சமுதாயத்தின் ஓர் அங்கம் என்பதை மறந்துவிடுவதில்லை. தன் சமுதாயத்தினரைப் புண்படுத்த வேண்டுமென நினைப்பதேயில்லை. பரிகாசமும் மிகவும் நயமாகவும் சரளமாகவும் இருக்கும். லத்தீன் ஆசிரியர்களுள் ஹோரெஸ் (Horace) என்பவர் இந்நெறியில் பிரகசனங்கள் எழுதியமையால், இதனை ஹோரேஷியன் (Horation) நெறியென்றுமேலைநாட்டறிஞர்கள் கூறுவார்கள். இந்நெறியைச் சாந்த நெறி என்று சொல்லலாம். பிறிதொரு நெறி உக்கிர நெறி என்று சொல்லலாம். தீமைகளையும் குற்றங்களையும் கண்டவுடன் ஆசிரியரது உள்ளங் கொதித்துப் பொங்குகிறது; எரிமலையினின்று பொங்கி வழியும் நெருப்பாறு போலக் கண்டனச் சொற்கள் பரந்து பாய்கின்றன. இந்நெறியில் அருவருப்பு எளிதில் உண்டாகும்படியாய் உண்மை சிறிது மிகுத்துக் கூறப்படுவதாகும். லத்தீன் ஆசிரியருள் ஜுவெனல் (Juvenal) என்பவர் இந்நெறியைக் கையாண்டமையால் இதனை ஜுவெனலியின் (Juvenalian) நெறியென்று கூறுவார்கள்.

பிள்ளையவர்களோடு பழகியவர்கள் மேற்சுட்டிய இரண்டு நெறிகளுள் சாந்த நெறியை அவர்கள் மேற்கொள்ளலாம் என்று நினைப்பார்கள். ஆனால், அந்

நெறி அவர்கள் நோக்கத்தை நிறைவேற்ற வல்லதல்ல. அவர்கள் கூறுமாறு:

**"காரணத் தீனம் கடிய தீனம்**
**கண்டு ரத்தில் மருந்து கருத்தாய்க்**
**கொடுத்தா லன்றிக் குணம் ஆகாது"**

(நாகாஸ்தி: 79-81)

ஆதலால் உக்ரநெறியே கைக்கொள்ளத் தக்கதா யிற்று. இந்நெறி தம் இயல்பிற்கு முற்றும் மாறா யுள்ளது; இதற்கு ஏற்றதொரு கதாபாத்திரத்தைச் சிருஷ்டித்து கதையும் ஒன்று அமைப்பது இன்றி யமையாததாய் முடிந்தது.

கதையைச் சொல்லுவது சூத பௌராணிகரா? அல்ல. அவருக்கு நாஞ்சினாட்டுக் குடும்பத்தினரின் துன்பத்தை அளவிட முடியுமா? அத்துன்பத்தின் காரணத்தை அடியோடு ஒழிக்க வேண்டுமென்ற அவரது உள்ளம் கொதித்தெழுமா? இரண்டும் முடியாத காரியம். அக்குடும்பத்திற் பிறந்த ஒருத்திக்குத்தான் இரண்டும் இயலும்; வாய் பேசாது 'மௌனமாயிருந்து துக்கங்களையெல்லாம் அடக்கி யடக்கி வைப்பாள்; முடிவில் அத்துக்கங்கள் நெடுங்காலமாக அடக்கப் பட்டிருந்த காரணத்தினாலே, குமுறிக் கொந்தளித்து அதிவேகத்துடன் வெளிப்புறப்படும். அந்நிலையில் வருஞ்சொற்கள் உண்மையொடு பட்டனவாகும்; கேட்டோர் இதயத்தைத் தகர்க்கத்தக்கனவாகும். இக் காரணங்களினால், நாஞ்சினாட்டுக் குடும்பத்திலுள்ள பெண்ணொருத்தியின் வாய்ப்பிறப்பாகவே கதையைப் பிள்ளையவர்கள் அமைத்துள்ளார்கள். தன் சுய சரிதை யையை அவளும் கூறுகின்றாள். இச்சுயசரிதையின் மூலமாக எத்தனையோ காட்சிகள் சித்திரிக்கப்படு கின்றன.

உலகமே துக்கமயமாய்த் தோன்றுகிறது. எல்லா வகை இடையூறுகளையும் நீக்கவல்ல விநாயகக் கடவுளும் இடையூற்றால் நெஞ்சு கலங்கி வருந்தி நிற்பவர்போலத் தோன்றுகிறார். அவரும் மருமக்கள் வழியைச் சார்ந்தவராயிருக்க வேண்டும். அதனால்தான் துன்புறுகிறாரெனச் சுயசரிதை கூறும் கதாநாயகி நினைக்கிறாள். இக்கடவுளின் அருகே நிற்கும் ஒரு சிலரிடத்தும் துக்கம் தோன்றுகிறது. ஆனால் மனத்தில் இரக்கமில்லை; ஏழைப்பெண் புலம்புவதில் ஒரு இலக்கண மாத்திரை அதிகமென்று துக்கிக்கிறார்கள். இவர்கள் வித்துவான்கள்; தாடி பற்றி எரியும்போது சுருட்டு பற்றவைக்க நெருப்புக் கேட்கிற இனத்தைச் சார்ந்தவர்கள். இவர்களைத் தனது சோகங்கலந்த சிரிப்பினால் ஒதுக்கிவிட்டுத் தனது கதையைத் தொடங்குகிறாள். துன்பத்திற்கும் வறுமைக்கும் தாயகமாயுள்ள ஒரு குடும்பத்தில் தோன்றினாள். அநாதை பஞ்சகலியாணிப் பிள்ளைக்கு ஐந்தாவது மனைவியாய் இவள் வாழ்க்கைப்பட்டாள்; புகுந்தகத்தில் செல்வமிருந்தது; ஆனால் துன்பத்துக்கும் குறைவில்லை. அங்கே அவளுக்குக் கிடைத்தது புழுக்கை யுத்தியோகந்தான்; சக்களத்திகளின் தலையணை மந்திரோபதேசமெல்லாம் இவள் தலையில்தான் விடிந்தது. மாமியின் கொடுங்கோலரசு; இவ்வரசி தாடகைப் பிராட்டியாரின் அவதாரம்; இவள் திருவிளையாடலெல்லாம் பத்துப் பரஞ்சோதிகள் பாடினாலும் முடிவடையாது.

இந்த ஆட்சியில் புது மருமகள்,

**''கஞ்சியோ கூழோ காடி நீரோ**
**கும்பி யாரக் குடித்ததோ யில்லை,''**

ஒருநாள் தன் மகன் கேலியாகப் பேசத் தொடங்கியது அவனுக்கே கெடுவினையாக முடிந்தது. இதனால் விளைந்த துன்பம்; இதுபோன்ற துன்பங்களிடையில் நகைப்பு—நிகழ்ச்சிகள்; தனது கணவன் மனைவியர் ஐவரோடு குமரித் தீர்த்தம் ஆடியது (இது தேவர்களுக்கும் ஆனந்தமளிக்கும் திருக்காட்சி); கணவன் தீர்த்தமாடியதன் பயனாக மீளாவுலகம் புகுந்து மீண்டு வந்தது; தான் அடைந்த தாங்கவொண்ணாத் துன்பம்; பின்னர், கணவனது எச்சிற் சோற்றுக்குச் சக்களத்திகள் செய்த சச்சரவு; இவையெல்லாம் மழையிருளும் மின்னலும்போல மாறி மாறிக் காட்சியளிக்கின்றன. காரணவனாகிய தன் கணவனை மருமகனாக அவகாசி பழித்து வைகிறான் இங்கே.

**"ஆரைக் கேட்டுநீர் ஐந்து கலியாணம்**
**அடுக்கடுக் காகச் செய்தீர் ஐயா?**
**பட்ட பெயரும் பஞ்ச கலியாணிப்**
**பிள்ளை யென்றும்நீர் பெற்று விட்டீரே!"**

என்று மருமகன் கூறுவது நகைச்சுவையின் பேரெல்லையைத் தொட்டுவிடுகிறது. மருமகனுக்கு விடையாகக் காரணவன் தனது ஸ்தானத்தின் கௌரவமும் குடும்பத்தின் பெருமையுந் தோன்றச் சொல்லும் சொற்கள் மிகவும் சுவை பொருந்தியவை. ஆலடிமாடன் கொடை, அதில் காரணவன் 'கணிசமாக' அலங்கார உடை தரித்து ஆடுதல், 'இழவு அடியந்திரம்,' கோயில்களில் குடும்ப கௌரவத்திற்காக ஏற்படுத்தும் கட்டளைகள், சானல் வாச்சர் (Channel Watcher) சந்தனத் தேவருக்கு 'அட்ரஸ்' கொடுத்தல், மருமகன் ஏழு வருஷமாய் இங்கிலிஷ் படித்து ஏ. பி. ஸி. டி. எழுதத் தெரியாமலிருத்தல், மருமகன் ராஜா திருவிளையாடல்கள், இவைகளெல்

லாம் நினைக்குந்தோறும் நம்மை விலாவொடியச் சிரிக்கச் செய்கின்றன. மருமகனது தந்தை வீரபத்திரப் பிள்ளை வந்து அவன் மகனுக்காகச் சண்டையிட்டு,

**''வைய வைய வைரக் கல்லும்**
**திட்டத் திட்டத் திண்டுக் கல்லும்''**

ஆகத் தன் கணவர் இருந்த காட்சி பார்ப்போருக்கு நகைக்கிடமாகவும், அவளுக்கு ஆற்றொணாத் துயரத் துக்கிடமாகவும் உள்ளது. பின் குடும்பச் சண்டை முற்றிக் கோர்ட்டுச் சண்டையாக மாறி விடுகிறது. முதலில் இருந்த வீறாப்புகள் வரவரக் குறைகின்றன; குடும்பச் சொத்துக் கரைந்து போய் விடுகிறது; காரண வருக்குத் தேக வலிமை குன்றி விடுகிறது; கவலையும் நோயும் பீடிக்கின்றன. முடிவில்,

**''படிப்படி யாம்இப் படிஅவர் பாடு**
**குறைந்து குறைந்து கொண்டே வந்தது;**
**அண்டைவீ டாகி, அறைப்புரை யாகி;**
**படிப்புரை யாகிப் பாயிலும் ஆனார்;**
**எழுந்து நடக்க இயலா தானார்;**
**நடந்தவர் கீழே கிடந்தார்; அம்மா!''**

நோயும் பாயுமாய்க் கிடந்த இக்காரணவருக்கு, இரண்டு, மனைவியர்களே கடைசிக் காலத்தில் உதவியவர்கள். கடைசிக் காலமும் அமைதியாய்க் கழிந்தபாடில்லை. அவரது தங்கையும் மருமகனும் இருக்கிற பொருள் களைக் காவல் செய்து வைப்பதற்கு வந்து சேர்ந்தார்கள். மருமகனிடத்தில் நல்ல வார்த்தை சொல்லித் தன் மனைவி மக்களைக் காப்பாற்றும்படி சொல்லுகிறார். தங்கை இதைக் கண்டு மிகவும் கோபித்து வைப்புத் திட்டங்களெல்லாம் பூட்டி முத்திரையிடச் செய்கிறாள். கதையைச் சொல்லி வரும் ஐந்தாம் மனைவி,

**''கணவர்க்கு அந்திய காலம் தண்ணீர்**
**குடிக்கும் பாத்திரம் குடுக்கை ஆனதும்**
**பரந்த சட்டி படிக்கம் ஆனதும்**
**பாலும் அன்னப் பாலே ஆனதும்''**

எண்ணியெண்ணி நெஞ்சம் குமுறுகிறாள். எல்லாவற்றிற்கும் மேலாகத் தன் கணவனது அந்திய நிலையில் அவரது ஆத்ம சாந்திக்குத் திருவாசகம் படிக்கத் தன் மகனைச் சொன்னபோது, அவன் தன்னால் முடியாதென்று தமிழை இகழ்ந்து சொன்னது இப்பெண் மணியின் நெஞ்சைப் பிளந்துவிட்டது. கணவர் முடிவு வந்தது;

**''ஏங்கி அழுத எங்களை நோக்கினர்;**
**வாடி அழுத மக்களை நோக்கினர்;**
**கடவுளை எண்ணிக் கையை எடுத்தனர்;**
**கண்ணை மூடினர், கயிலைபோய்ச் சேர்ந்தனர்.''**

கதாநாயகியின் துக்கம் நிரம்பிவிட்டது. அவள் கண்களிலும் இதயத்திலும் உதிரங் கொட்டுகிறது; அவள் வயிறு எரிகிறது. அனற் பிழம்பு பெருக்கெடுத்தோடுவது போல அவள் சொற்கள் புறப்படுகின்றன. மருமக்கள் வழி,

**''மனிதரைப் பேயாய் மாற்றும் பாழ்வழி;**
**... ...**
**நடைப்பிணம் ஆயிரம் நடக்கும் வனவழி;**
**வெவ்வழி, சற்றும் வெளிச்ச மிலாவழி''**
**இருள்வழி, செல்பவர் இடறும் கல்வழி;**
**... ...**
**அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமென்று**
**அவ்வை சொல்மொழி அறியா மடவழி**
**ஐயோ, இவ்வழி ஆகாது, ஆகாது;**
**ஆடுகள் மாடுகட்கு ஆகும் இவ்வழி**
**மனிதர் செல்லும் வழியா யிடுமோ?**
**... ...**

கற்றவர் உளரோ? கற்றவர் உளரோ?
பெற்ற மக்களைப் பேணி வளர்த்திடாக்
கற்றவர் உளரோ! கற்றவர் உளரோ?
அறிஞரும் உளரோ! அறிஞரும் உளரோ?
வறுமைக்கு இரையாய் மக்களை விட்டிடும்
அறிஞரும் உளரோ! அறிஞரும் உளரோ?
நீதியும் உளதோ! நீதியும் உளதோ?
மாதர் கண்ணீர் மாறா நிலத்தில்
நீதியும் உளதோ! நீதியும் உளதோ?
தெய்வமும் உளதோ! தெய்வமும் உளதோ?
பொய்வழிப் பொருளைப் போக்கும்இந் நிலத்தில்
தெய்வமும் உளதோ; தெய்வமும் உளதோ?''

என்று கதறி ஓலமிடுகிறாள் நமது கதாநாயகி.

IV

இப்புதிய கண்ணகியின் ஓலம் வீணாகிப் போய் விடுமா? நாஞ்சினாட்டுப் பெருமக்கள் காதைத் துளைத்து விட்டது. அவர்கள் இதயக் கோட்டையைத் தாக்கித் தகர்த்துவிட்டது. அவர்கள் குடும்பம் மேன்மையடைவதற்குரிய சீர்திருத்த மசோதா, கொல்லம் ஆண்டு, 1101-ல் (1926) சட்டசபையில் நிறைவேறி 1102-ல் அமுலுக்கு வந்தது. இம் மான்மியமே சீர்திருத்தத்திற்குக் காரணமாயிருந்தது.

இம் மான்மியம் திருவனந்தபுரத்திலிருந்து முன் பிரசுரிக்கப்பட்டு வந்த 'தமிழன்' என்ற பத்திரிகையில் 1917-ம் வருஷம் மார்ச்சு மாதம் தொடங்கிப் பகுதி பகுதியாக வெளிவந்துகொண்டிருந்தது. 1918 பெப்ருவரியோடு முற்றுப்பெற்றது. அக்காலத்தில் அப் பத்திரிகையின் ஆசிரியராயிருந்தவர்கள் பண்டித எஸ். முத்துசாமிப் பிள்ளையவர்களும், திருவனந்தபுரம், மஹாராஜா கல்லூரி மலையாளப் பேராசிரியர் சி. என். ஏ அனந்தராமைய சாஸ்திரிகளும் ஆவார்கள்.

பத்திரிகையில் ஆசிரியர் பெயரோடு மான்மியம் வெளிவரவில்லை. பழைய ஏட்டுச்சுவடியில் இருந்த நூலை அச்சிற் பதிப்பிக்கிற பாவனையிலே வெளியாகிக் கொண்டிருந்தது. ஆசிரியர் பெயர் காணப்பெறா விட்டாலும், பழைய நூல் என்ற தோற்றத்தோடு பிரசுரமாகியபோதிலும், இத் தோற்றத்தை உறுதிப் படுத்துவதற்கு நூலிற் சிற்சில வரிகளும் சொற்களும் பொடிந்து போயின என்று குறிப்பிட்டிருந்த போதிலும் எழுதியவர்கள் இன்னார்தாமென்றது பலருக்குத் தெரிந்த இரகசியமாகத்தான் இருந்தது. ஒவ்வொரு பகுதியும் வெளிவர வெளிவர, தமிழ் மக்கள் அதனை ஆவலாய் வாங்கிப் படித்து வந்தார்கள். இலக்கியச் சுவையிலே ஈடுபட்ட ஸ்ரீ. கே. ஜி. சேஷையர் முதலான வர்கள் இந்நூலின் பெருமையைப் பலரும் அறியச் செய்து வந்தார்கள். நாஞ்சினாட்டு வேளாள இளைஞர்கள் இதனை வாசித்து உள்ளங்கொதித் தார்கள். அவர்களில் முதியோர்கள் இதனை வாசித்த அளவில் இதிலே பொதிந்து கிடக்கும் உண்மையையும் சீர்திருத்தத்தின் அவசியத்தையும் உணர்ந்தார்கள். அந்நாட்டு ஆண்களும் பெண்களும் நூலிலுள்ள நகைச் சுவையில் ஈடுபட்டு உள்ளத்தாற் சிரித்து மகிழ்ந்தார்கள். தமிழிலே ஒரு நூதன இலக்கியம் தோன்றிவிட்டது.

மான்மியம் ஒரு சமுதாயத்தில் சீர்திருத்தத்தை விளைத்தது. அப்படியே தமிழ் நடையிலும் கவிஞர் சமுதாயத்திலும் சீர்திருத்தத்தை இது விளைவிக்க வல்லது என்பதைத் தமிழ் அறிஞர்களுக்குத் தெரிவித் துக்கொள்ளுகிறேன்.

சென்னை
ஸர்வகலாசாலை
20—11—42.

எஸ். வையாபுரிப் பிள்ளை,
தமிழாராய்ச்சித்துறைத் தலைவர்

## கதைச் சுருக்கம்

நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி வேளாளர் குலத்தில் பிறந்த ஒரு பெண், தன் ஜீவிதகாலத்தில் அனுபவித்த கஷ்டங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி வருந்து கிறாள். இவள் ஓர் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவள். பதினாறாவது வயதில், ஒரு பிரபுவுக்கு ஐந்தாம் மனைவி யானாள்; கணவன் வீட்டில், மாமி சக்களத்திகள் மதினி முதலியோரால் இவள் அடைந்த துன்பத்திற்கு அளவில்லை. சிறிது நாளில், இவள் கணவனுக்கும் அவன் மருமகனுக்கும் குடும்பக் காரியங்களை முன் னிட்டு மனஸ்தாபம் உண்டாயிற்று. மனஸ்தாபம் முற்றி வழக்காய் முடிந்தது. வழக்கு முடியுமுன் கணவன் வியாதியில் வீழ்ந்தான். அச்சமயம் அவனு டைய அவகாசிகள் செய்த துன்பங்களைச் சொல்லி முடியாது. மரணத் தறுவாயில், கணவன் தன் மக்க ளைக் காப்பாற்றும்படி மருமகனிடம் ஒப்புவித்தான். ஆனால், அவன் இறந்தவுடன் மனைவி மக்கள் யாவரும் வீட்டிலிருந்து வெளிப்படுத்தப்பட்டனர். அப்பொழுது தங்களுக்குள் வழங்கும் மருமக்கள்வழி அவகாசக் கிரமத்தை அப் பெண் பழித்துரைக்கிறாள்.

* அவகாசிகள்—வாரிசுகள்.

# மருமக்கள்வழி மான்மியம்

## விநாயகர் வணக்கம்

எம்பெரு மானே! இணையடி பரவும்
அன்பினர் வேண்டிடும் அவையெலாம் அளிக்க
யானை நீள்கரம் ஏந்திய கடவுளே!
உலகெலாம் போற்றும் ஒருவனே! உனது
தந்தையோ,

என்றும் கையில் தலையோ டேந்தி
இரந்து திரிவான் இருப்பிட மில்லான்,
அம்பலந் தோறும் ஆடிஅலைவான்,
அமிழ்தென நஞ்சையும் அள்ளி யுண்பான்,
பித்த னாகிப் பேயொடு குனிப்பான்,
நாடிய பொருளெலாம் நாசஞ் செய்வான்.

---

2—3. இவ்வடிகளுக்கு இருவகையாகப் பொருள் கூறலாம். 'அன்பினர் உனக்கு வேண்டிக்கொடுப்பவற்றையெல்லாம் வாரியுண்பதற்கு (அளிக்க) வசதியாக யானை நீள்கரம் ஏத்தினாய்' என்பதொன்று; 'அன்பினர் உன்னிடம் வேண்டுபவற்றையெல்லாம் அவர்களுக்கு அளிக்க யானை நீள்கரம் ஏந்தினாய்' என்பது மற்றொன்று.

10. குனிப்பான்—நடனமாடுவான்.

மாமனோ,
பூமக ளோடும் புவிமக ளோடும்
மதித்திட அரிய வளமெலாம் ஒருங்கு
வைகுந் திவ்விய வைகுந் தத்தில்
ஆயிரம் பணாமுடி அரவணை மீதே
அறிதுயி லமர்ந்திவ் வகில மெல்லாம்
ஆளும் பெரிய அண்ணலே யாயினும்,
கபட நாடகன்; கையிற் சக்கரம்
இருந்தும், எவர்க்கும் ஈயாக் கள்வன்;
ஆதலின், நீயும்
தந்தை வீடெனத் தங்கிட மின்றி
மாமன் வீடென மதிப்பிட மின்றிச்
சந்தியும் தெருவும் தண்ணீர்க் கரையும்
மரத்தி னடியும் வாழிட மாக
இருந்தனை, உன்போல் இருவழி கட்கும்
இடைவழித் தங்கி இடர்ப்படும் எங்கள்
வருத்த மெல்லாம் அறிந்திட வல்லவர்,
அறிந்து முற்றும் அகற்றிடும் நல்லவர்,
நடுநிலை கண்ட நாயகர் வேறிங்கு
ஒருவரும் இல்லை;உன் திருவடி பணிந்து
மருமக் கள்வழி மான்மியம் பாடத்
தொடங்கினன், வந்து துணைநின் றிந்நூல்
இனிது முடிய இதயம்
கனிவு செய்தெனைக் காத்தருள் வாயே.

---

**19-20.** சக்கரம் -இரு பொருள்; திருமால் கையிலேந்திய சக்கராயுதம்; திருவிதாங்கூரில் வழங்கிய சக்கரம் என்னும் ஒரு செப்பு நாணயம். இப்பெயருடைய நாணயங்கள் கொல்லம் ஆண்டு 1125 புரட்டாசி மாதம் 30-ஆம் தேதியோடு, அரசாங்கத்தாரால் நிறுத்தப்பட்டுவிட்டன.

## அவையடக்கம்

அருந்தமிழ் அகத்தியன் ஆராய்ந் திடவும்
கேள்வியற் பெரியநக் கீரன் கேட்கவும்
கல்வியிற் பெரியனாம் கம்பன் காணவும்
இயற்றிய நூலிதென் றெண்ணவும் படுமோ?
மருமக் கள்வழி யென்னும் வனத்தில்

புலிகள் சூழுமோர் புல்வாய் போல
வலையிற் படுமோர் மணிப்புறாப் போலக்
கொள்கொம் பற்றுத் துவள்கொடி போல
ஒருத்தி ஏழை ஒருதுணை யில்லாள்
தானும் மக்களும் தமிய ராகிப்

பொறியும் கலங்கிப் போதமும் கெட்டுப்
புலம்பும் பொழுது புண்ணிய சீலரே!
தொல்காப் பியமுதல் பல்காப் பியங்களும்
கற்றுத் தெளிந்த கவிவல் லோரே!
விகார முற்றும் விரவி வருமலால்

---

6. புல்வாய் : மான் வகையில் ஒன்று.

13. தொல்காப்பியம் : தமிழிலுள்ள பழைய ஓர் இலக்கண நூல்; இதனைச் செய்தவர் தொல்காப்பியர்.

பல்காப்பியம் : பல காவியம். சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய பெருங்காவியங்கள்.

பொருட்சுவை சொற்சுவை பொருந்திவந் திடுமோ?
எதுகை மோனை இசைந்துவந் திடுமோ?
அணிகள் பற்பல அடுக்கிவந் திடுமோ?
ஆதலின், இதனைப்
பதவியும் பணமும் படிப்பு மிலோதேன்
பஞ்சப் பாட்டெனப் பழித்திக ழாதீர்.
இலக்கண வழூஉக்கள் இருப்பினும் அவற்றை
வலித்தல் மெலித்தலாய் மதித்துக் கொண்மின்
நீட்டல் குறுக்கலாய் நினைத்துக் கொண்மின்
விரித்தல் தொகுத்தலாய் விளக்கிக் கொள்மின்
பழையன திரிதலாய்ப் படித்துக் கொண்மின்
புதியன புகுதலாய்ப் பொறுத்துக் கொண்மின்
இன்னும்,
அமைக்கும் விதியறிந் தமைத்துக் கொண்மின்
நாயேன்,
கொண்ட கருத்தைக் குறைவறக்
கண்டு கொள்வது பெரியவர் கடனே.

---

22. இலக்கண வழூஉக்கள் : இலக்கணப் பிழைகள்.

23-25. செய்யுள் விகாரங்கள் :
"வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செய்யுள்
வேண்டுழி" (நன்னூல், 155)

26-27. "பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே."
(நன்னூல், 462)

## 1. குலமுறை கிளத்து படலம்!

என்கதை கேளும்! என்கதை கேளும்!
இரக்கமுள் ளோரே என்கதை கேளும்
நூல்களைக் கற்ற நுண்ணறி வோரே!
நடுநிலை நீதி நடத்தும்நல் லோரே!
மக்களைப் பெற்று வளர்க்கும் சிலரே!

ஏழையென் துயரம் எல்லாம் கேளும்;
காசினி மீதென் கதைபோல் இல்லை.
சீதையின் கதையும் சிறுகதை யாகும்.
பாஞ்சா லியின்கதை பழங்கதை யாகும்
தமியேன் கதைக்குச் சந்திர மதிகதை

உமியாம், தவிடாம், ஊதும் பொடியாம்.
கேளும்; கேளும்! என்கதை கேளும்!
பதும நாபன் பாத பங்கயம்

---

8. சீதையின் கதை : இராமாயணம்.
9. பாஞ்சாலி கதை : மகாபாரதம்.
10. சந்திரமதி கதை : அரிச்சந்திர புராணம்.
13. பதுமநாபன்– திருவனந்தபுரத்தில் எழுந்தருளியுள்ள திருமால். பாத பங்கயம்—திருவடித் தாமரை.

அணிமுடி யாக அணிதிரு மூல
மன்னர் புரக்கும் வளமலி வஞ்சி
நாட்டிற் சிறந்த நாஞ்சில் நாட்டில்
தொல்லூ ராகும் நல்லூ ரதனில்
மேழிச் செல்வம் விரும்பும்வே ளாளர்
குலத்தில்ஓர் எளிய குடியிற் பிறந்தேன்.
தந்தையோ யாளி, தாயுமோ ரேழை

அண்ணன் தம்பிகள் ஐவரும் மாண்டார்
அக்காள் தங்கையும் இல்லை; அடுத்தவர்
உற்றார் உறவினர் ஒருவரு மேயிலை;
ஒருதடி நிலமும் ஓரணை ஏரும்
ஒருசிறு குடிலும் உண்டெமக் காஸ்தி.

ஐயோ தெய்வமே! ஐயோ தெய்வமே!
உற்றதெ லாம்சொல ஒருகழி நூலாம்.
ஒருநாள் போதுமோ? இருநாள் போதுமோ?
முற்றும் கேளும், முடிவையும் பாரும்!

---

14-15. திருமூல மன்னர் — திருவிதாங்கூர் நாட்டை கி.பி. 1886 முதல் 1924 வரை ஆண்ட அரசர். வஞ்சிநாடு— திருவிதாங்கூர் நாடு.

17. நல்லூர் — சுசீந்திரத்தின் அருகிலுள்ள ஒரு சிற்றூர்.

24. தடி—வயல், ஓரணை ஏர்—உழவு வேலைக்கான ஒரு ஜதை மாடும், அதற்குரிய ஒரு கலப்பை நுகமும். இம் மான்மியத்தில் பின்னர் வரும் 'ஈரணை ஏரும் ஏழு பசுவும்' (9:109) என்பதனோடு ஒப்பு நோக்குக. கல்வெட்டுகளிலும் 'அணை' என்றுதான் வந்திருக்கிறது. உலக வழக்கிலும் ஓரணை ஏர், ஈரணை ஏர் என்றே வழங்கி வருகின்றனர்.

27. ஒரு கழி நூல் : மிக நீண்டது. நூலைப் பிரிக்கப் பிரிக்க வந்துகொண்டேயிருப்பதுபோல, கதையும் சொல்லச் சொல்ல வளர்ந்து கொண்டே போகும்; சொல்லி முடிவு பெறாது.

தாழையம் பதிக்குத் தலைவர்—அவர்பெயர்
ஏழையான் சொல்வது இசையுமோ? அம்மா!
பாவியாம் என்னைப் பதினா றாண்டில்
ஐந்தாம் மனைவி யாக மணந்தனர்.
கணவர் வீட்டுக் கதையினைக் கேளும்:
மனைவியர் வேலை வகையினைக் கேளும்:

தொழுத்துச் சாணம் வழிக்க ஒருத்தி;
தொட்டித் தண்ணீர் சுமக்க ஒருத்தி;
அடுக்களைச் சமையல் ஆக்க ஒருத்தி;
அண்டையில் அகலா திருக்க ஒருத்தி;
அத்தனை பேருக்கும் அடிமை யாளாய்

ஏழை பாவி யானும் ஒருத்தி;
எளியேன் சென்ற நாள்முத லாக
எல்லா வேலையும் என்தலை மேலாம்.
பெண்டிர் நால்வரும் பென்ஷன் பெற்றனர்.
பெரிய அக்காள் பெருமாப் பிள்ளை

''ஏனடி அம்மா! யான்ஏ காங்கி.
உரிய அரிசி உண்டெனில் சோறு;
உழக்குக் குறுநொய் உண்டெனில் கஞ்சி;
மக்களைப் பெற்ற மகரா சிகள்நீர்
உண்ண வேண்டும், உடுக்க வேண்டும்;

---

30-31. தாழையம்பதி — தாழைக்குடி என்ற ஊர்; நாகர்கோவிலுக்கு அருகிலுள்ளது. கணவர் பெயரை மனைவியர் சொல்லுதல்கூடாது என்பது சமுதாய வழக்கம்.

36. தொழுத்துச் சாணம்—மாட்டுத் தொழுவிலுள்ள சாணம்; தொழு—மாட்டுக்கொட்டில்.

45. பெருமாப்பிள்ளை—ஒரு பெண்ணின் பெயர்.

46. ஏகாங்கி-குழந்தையில்லாமல் தனியே யிருப்பவள்.

உழைத்துப் பொருளுண் டாக்க வேண்டும்;
எனக்கினி யிங்கே யாதுண் டம்மா?''
என்று பெருமூச் செறிந்து சொல்லி,
இருந்த இடம்விட் டகலவே மாட்டாள்.
அடுத்த அக்காள், அழுபிள்ளைக் காரி;

அடமும் கொஞ்சம் அதிகம் கொண்டவள்;
அம்மா மிளகை அரைஎன் றால்உடன்
அவள்கை மதலை அழுவது கேட்டிடும்;
பிள்ளைக் குணமோ, பிடுங்கிவைப் பாளோ,
என்ன மாயமோ, யானேதும் அறியேன்.

மூன்றாம் அக்காள் முழுச்சோம் பேறி.
அன்றியும்,
மூன்று மாதமாய் முழுகவு மில்லை;
வாயா லெடுப்பாள் வயாக்கோட். டியினால்;
ஏறின கட்டில் இறங்கவே மாட்டாள்.

இனியோர் அக்காள் எடுப்புக் காரி.
இந்தி ராணியும் ஈடில்லை; இவளது
மஞ்சள் பூச்சும் மயக்கிடு பேச்சும்
சாந்துப் பொட்டும் தாசிகள் மெட்டும்
கோல உடையும் குலுக்கு நடையும்

கொண்டை யழகும் கண்டு, கணவர்
அண்டையி லிருந்து அகலவே ஒட்டார்;
'தங்கப் பெண்ணே தாராவே!
தட்டான் கண்டால் பொன் என்பான்

---

63. முழுகவுமில்லை—கர்ப்பமாயிருக்கிறாள்.
64. வயாக்கோட்டி—மசக்கை.
66. எடுப்புக்காரி—கர்வமுடையவள்.
73-76. இது, வாய்மொழியாக வழங்கும் ஒரு பாடலின் பகுதி.

தராசிலே வைத்து நிறு என்பான்
எங்கும் போகாமல் இங்கே யேயிரு'

என்று சொல்லுவ திவட்கே இசையும்
இவள்,
அடுக்களை வந்திடாள்—அரக்குப் பாவையோ?
கரிக்கலம் கையெடாள்—கனகசுந் தரியோ?

வாருகோ லேந்திடாள்—மகராணி மகளோ?
வெயிலில் இறங்கிடாள்—மென்மலர் இதழோ?
குடத்தை எடுத்திடாள்—குருடியோ நொண்டியோ?
வஞ்சகி இவள்செய் தலையணை மந்திர
உபதே சங்களை உண்மையென் றெண்ணிக்

கணவன் ஒவ்வொரு காலத் தெங்களைப்
படுத்திய பாடெல்லாம் பகர்வதும் எளிதோ?

---

79. அரக்குப் பாவை—மெழுகினலாகிய பொம்மை. மெழுகு நெருப்புப்பட்டால் உருகிவிடும் என்னும் கருத்தால் அடுக்களை வந்திடாள் என்கிறாள். அடுக்களையில் நெருப்பு இருக்குமல்லவா?

80. கரிக்கலம்—கரி பட்ட பாத்திரம்.

81. வாருகோல்—துடைப்பம். மகராணி—மகாராணி; பேரரசி.

84. தலையணை மந்திரம்—படுக்கையறையில் மனைவி ணவனுக்கு இரகசியமாகச் சொல்லும் கோள்.

## 2. மாமி அரசியற் படலம்

இவர்கதை இவ்வா றாக, இனிஎன்
மாமி கதையை வகுப்பேன் கேளும்:
அரங்கு பூட்டாம், அறைப்புரை பூட்டாம்;
தட்டுப் பூட்டாம் சாய்ப்புப் பூட்டாம்.
அரிசியை நிதமும் அளந்து வைப்பாள்;
நல்ல மிளகை நறுக்கி வைப்பாள்;
கொல்ல மிளகைக் குறுக்கி வைப்பாள்;
உப்பில் புளியை உருட்டி வைப்பாள்;
கறிக்குத் தேங்காய் கருக்கி வைப்பாள்;
கடுகையும் எண்ணிக் கணக்கிட்டு வைப்பாள்;

தீபா வளிக்குத் தீபா வளியே
எண்ணெ யறியும் என்தலை அம்மா!
அரைக்க மஞ்சள் அளித்திடா மாமி
குளிக்க மஞ்சள் கொடுத்திடு வாளோ?
உம்மே லாணை, ஒருநா ளாகிலும்
கஞ்சியோ கூழோ காடி நீரோ
கும்பி யாரக் குடித்ததே யில்லை;
கந்தைத் துணிகள் கட்டின தல்லால்,

---

3-4. அரங்கு, அறைப்புரை, தட்டு, சாய்ப்பு: வீட்டின் பாகங்கள்.

7. கொல்லமிளகு—மிளகாய் வற்றல், நன்றாய்ப் பழுத்துக் காய்ந்த வற்றல் மிளகு.

கண்டாங் கிகளைக் கண்டதே யில்லை,
அடுக்களை நடையே நிலைய மாயினும்

அங்கும் இங்கும் ஆகஅவ் வீடு
எங்கும் இருப்பாள் எங்கள் மாமி.
இவளொரு கண்ணுக் கிணைஅவ் இந்திரன்
ஆயிரம் கண்ணும் ஆகா துண்மை.
பின்னே நோக்கினும் முன்னுள தறியும்

முன்னே நோக்கினும் பின்னுள தறியும்;
எறும்பும் காணா இடத்திவள் காண்போம்;
புகையும் நுழையா இடத்திவள் புத்திபோம்,
ஆணாய்ப் பிறந்தால் அகிலம் ஆளுவாள்;
இருகண் இருப்பின் இடமிது போதுமோ?

எல்லாம் வல்ல எம்பெரு மான்இவள்
குணத்தை அறிந்தே கொடுத்தான் ஒருகண்.
கணகண என்றெக் கணமும் நாக்கின்
அடிக்கும் மணிவிசை அடங்கி விடுமென்று
எவரும் எண்ணி யிருந்ததே யில்லை.

ஊரை முழுதும் உழக்கால் அளப்பாள்;
நாட்டை முழுதும் நாழியால் அளப்பாள்.
நரியை முன்னம் பரியாய் ஆக்கின
நாதனும் கண்டு நாண, இவளும்
யானையைப் பூனை யாக மாற்றுவாள்;

பூனையை யானை போலக் காட்டுவாள்.
ஐயோ! உலகுக் கெங்கள் அருமை

16. கண்டாங்கி—சாயப்புடைவை.
38-39. நரியை...... நாதன்—மதுரைச் சோமசுந்தரக் கடவுள்.

அத்தை திருவிளை யாடலை யெல்லாம்
பத்துப் பரஞ்சோ திகளே பாடினும்,
முடியா தென்றால், மூதறி வில்லா

அடியாள் சொல்லி அறியப் படுமோ?
இரக்கம் சிறிதும், இன்றி, எனக்கிவள்
இடுவாள் வேலைகள் இரவும் பகலும்,
குழந்தைக் குப்பால் கொடுக்க வொட்டாள்;
கும்பி யாரக் குடிக்க வொட்டாள்;

உண்ண வொட்டாள்; உறங்க வொட்டாள்;
உடலைக் கீழே சரிக்க வொட்டாள்;
அருமை மதினி அடிக்கடி அடிக்கடி
சடைவா றுதற்குத் தாய்வீட டைவாள்;
மக்களும் பின்னால் வருவர்; புருஷன்

இரண்டொரு நாள்கழித் தெட்டிப் பார்ப்பான்;
வந்தால், போகும் வரையிலும் என்னை
அம்மியில் வைத்துச் சம்மந்தி யாக
அரைத்து விடுவாள்; ஐயம் அதற்கிலை.
என்னிரு மக்களும் இவருக் கேவல்

செய்துசெய்து துரும்பாய்த் தேய்ந்தார்.

---

44. பரஞ்சோதி—திருவிளையாடற்புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர்.

52. சரிக்க—சாய்க்க; படுக்க.

54. சடைவு ஆறுதற்கு—இளைப்பு நீங்குவதற்கு.

58. சம்மந்தி (சம்பந்தி); துவையல் வகை. ஒரு பெண்ணின் நாயகனுடைய தங்கை அவளைவிட வயதில் சிறியவளாயிருந்தால் அவளுக்குச் சம்பந்தி முறையாவாள்; அவளுடைய தம்பி மனைவியும் அவளுக்குச் சம்பந்தியாவாள்.

## 3. கேலிப் படலம்

என்மகன் சாமி, ஏதோ ஒருநாள்,
அத்தை மகளென விளையாட் டாகவே,
வேண்டு மென்றோ, 'வீர லெச்சுமி!
குலுக்கை போலக் குறுகிப் போனாயே!
எருமை போல இளைத்துப் போனாயே!

பனந்தூர் போலப் பாற்றிப் போனாயே!
வயிற்றில் உனக்கு மடிப்புகள் எத்தனை?
இன்னும் சிலநாள் இங்கிருப் பாயேல்,
வாசலும் வேறு மாற்றவே வேண்டும்,
குதிலும் வெளியாய்க் கொஞ்சநா ளாச்சுதே!

பந்தய நெல்லும் பாதி யாச்சுதே!
நீங்களும் வந்து நெடுநா ளாச்சுதே!
இந்த ஆடி முழுதுமிங் கிருந்து
புதுநெல் வரினும் போகமாட் டீரோ?
நல்லது நல்லது, நல்லது அம்மா!

---

4. குலுக்கை—குதிர்.

6. பனந்தூர்—பனைமரத்தின் அடி.

10-11. குதில், பத்தயம் முதலியவற்றுள்ள நெல்லெல்லாம் தீர்ந்துவிட்டது. இவர்கள் வந்து நீண்ட நாள் தங்கி உண்டதனால் என்பது குறிப்பு.

திின்பவ னெல்லாம் தின்பான் போவான்,
திருக்கணங் குடியான் தெண்ட மிறுப்பான்.
அவியல் பொரியல் துவையல் தீயல்
பச்சடி தொவரன் கிச்சடி சட்டினி
சாம்பார் கூட்டுத் தயிர்ப்புளி சேரி

சேனை ஏத்தன் சேர்த்தெரி சேரி
பருப்பு பப்படம் பாயசம் பிரதமன்
பழமிவை யோடு படைப்புப் போட
எத்தனை நாளைக் கெங்களால் ஏலும்?
அரசனும் கூட ஆண்டியா வானே!

இப்படி உண்மை யிருக்க, யாவும்
மக்களுக் காக வாரிக் கொடுத்தான்,
கடன்கள் வாங்கினான், கைசீட் டெழுதினான்,

---

16-17. 'தின்றவன் தின்றான், திருக்கணங் குடியான் தெண்டமிறுப்பான்' என்பது பழமொழி. செலவு செய்பவன் ஒருவன்; ஆனால் சுகமும் அனுபவமும் பெறுபவன் வேறொருவன் என்பது பொருள். திருக்கணங்குடி-திருக்குறுங்குடி. தெண்டம் இறுப்பான்-வரியைக் கொடுப்பான்.

18-20. கறிவகைகள்.

21. சேனை - சேனைக்கிழங்கு, ஏத்தன்-ஏத்தங்காய் (ஒருவகை வாழைக்காய்), எரிசேரி - இவற்றைச் சேர்த்துச் செய்யும் கறிவகை.

22. பப்படம்-அப்பளம், பிரதமன்-பாயசவகை.

23. படைப்புப் போட: சிறு தெய்வங்களுக்குப் படைக்கும் அன்னம், கறிவகை முதலியவற்றைப் படைப்புப் போடுதல் என்று சொல்லுவர். விசேஷ பிரார்த்தனை (சிறப்பு) காலங்களில் செய்யும் இவ்வகைப் படைப்பில் எல்லா வகையான கறிவகைகளும், கனிவர்க்கங்களும் பரிமாறியிருப்பர். இங்கும், அதுபோல் அவியல், பொரியல் முதலிய ஏராளமான கறிவகைகள் வைத்துத் தினமும் பெருவிருந்து உண்ணுகிறார்கள் என்பது கருத்து.

28. கைச்சீட்டு: கையால் எழுதிய குறிப்புச் சீட்டு.

ஒற்றி கொடுத்தான்' என்றுன் பெற்றோர்
எங்கள் ஐயாவைத் தூற்றுவ தெல்லாம்,
உணர்வில் லாமல் உளறுவ தல்லவோ?'
என்று கூறிய மொழிகள் யாவையும்
மங்கை கேட்டு, மனம்நொந் தழுது,
ஒன்றைப் பத்தாய்ப் பெருக்கி, உடனே
தாய்க்குச் சொன்னாள்; தந்தையும் அறிந்தார்;
பையப் பையப் பாட்டியும் அறிந்தாள்;
யாவரும் கூடி, என்கண் மணியை
'உனக்கிங் கென்ன உண்டடா பயலே?
உடையக் காரியைத் தடைவையோ பயலே?
பத்திர மாயிரு! பாழைய காட்டுக்கு
அனுப்பி விடுவேன், அறிநீ பயலே!'
என்றிப் படிநா எழுந்தது சொல்லி,
ஏசி வசைகள் பேசிப் பிரம்பால்
ஐயோ! ரத்தம் சிந்த அடித்தனர்.
காணா தென்று கண்ணில் மிளகும்
இட்டனர், இரக்கம் கெட்டவர், பாவிகள்
நடத்தை யெல்லாம் நன்கறிந் தாலும்,
யாதும் பேசா திருப்பர்என் கணவர்.

---

**29.** ஒற்றி கொடுத்தல்: சொத்தை அனுபவிக்கும் பாத்தியதையுடன் அடைமானம் வைத்தல்.

**30.** ஐயா—தந்தை.

**39.** உடையக்காரியைத் தடைவையோ—சொத்துக்கு உடையவளை நீ தடைசெய்வாயோ.

**40.** பழைய காட்டுக்கு—முன்னிருந்த இடத்துக்கு; தாய் வீடான நல்லூருக்கு; அங்கு ஏழைக் குடும்பமாதலால், சாப்பாட்டுக்கு வழியின்றிக் கஷ்டப்பட வேண்டி வரும் என்பது கருத்து.

## 4. கடலாடு படலம்

நேர்ந்த வெல்லாம் நெடுநா ளாகியும்
நெஞ்சைவிட் டின்னும் நீங்க வில்லையே!
இவற்றை
இறந்து போகுநாள் அன்றி, இடையில்
மறந்து போய்விட மருந்தும் இல்லையே!

சென்ற,
ஆடி மாதம் அமாவாசை யன்று
குடும்பத் தோடு குமரித் துறையில்
தீர்த்த மாடச் சென்று, நாங்கள்
பட்ட பாடும் பரிசு கேடும்

சொல்லி முடியுமோ! சொல்லி முடியுமோ!
கரையில் தர்ப்பணக் கடனெலாம் முடித்து,
நீரில் இறங்காது நின்றனர் கணவர்.
நின்றனர், நின்றனர், நெடிது நின்றனர்.
கண்டவர், 'இதற்கென் காரணம்' என்றனர்.

அவரும்,
'ஏக காலத் திவர்களை எல்லாம்
அங்கை பிடித்துநீர் ஆடு தற்குதான்

---

8. குமரித்துறை - கன்னியாகுமரி.

பன்னிரு கரத்தப் பரமன் அல்லவே,
இருபது கரத்தவ் இராக்கதன் அல்லவே,
ஆயிரங் கரத்தவ் அண்ணலும் அல்லவே!
என்று பலபல சொல்லி, இறுதியில்
மணந்த முறையாய் மனைவிய ரெங்களைத்
தனித்தனி யாகத் தடங்கை பற்றிக்
கடல்நீ ராடினர், கதையிது பெரிதே!

இங்ஙனம்
ஐந்து முறைநீ ராடிவந் ததனால்
ஐயோ! அவரும் அறுபது நாள்விடாச்
சுரத்தில் விழுந்து துன்பம் அடைந்தனர்.
அடையவே,

ஏட்டைத் திருப்பித் திருப்பி யிருந்தும்,
பாட்டைப் பாடிப் பாடி யிருந்தும்,
நாட்டு வைத்தியர் நாளைக் கடத்தினர்.
முடிவில்,
மிஷியன் தெரசர்—மிகத்தய வுள்ளவர்,

பொறுமை நல்லகைப் புண்ணிய முள்ளவர்,
இறைவன் அடிகள் இதயத் துள்ளவர்—
வந்தொரு வாரம் மருந்து கொடுத்துக்
கணவரை மீட்டுஎம் கைகளி லாக்கினர்.

---

19-20. பன்னிரு கரத்தப் பரமன்-முருகன்.
இருபது கரத்தவ் இராக்கதன்-இராவணன்.
ஆயிரங் கரத்தவ் அண்ணல்- வாணாசுரன்.

35. மிஷியன் தெரசர்-லண்டன் மிஷின் சங்கத்தைச் சேர்ந்த வைத்தியர்.

இவர்,

காட்டை வெட்டிக் கஷாய மிடவோ
கடலைக் குறுக்கிக் குடிநீர் காய்ச்சவோ
மலையை யிடித்துச் சூரணம் வைக்கவோ
சொல்லி, எங்களைத் தொந்தரை செயவிலை;
அன்றியும்,

பணமோ காசோ பாதிவெற் றிலையோ
எமக்குச் செலவுகள் ஏற்பட் டதுமிலை.
இவ்வறம்,
வையகத் தென்றும் வளர்க! வளர்கவே!
வையகத் தென்றும் வளர்க! வளர்கவே!

---

43. சூரணம்—சூர்ணம், பொடி.

44. தொந்தரை—தொந்தரவு, துன்பம்.

46. பணம், காசு என்பன முன்பு நாஞ்சில் நாட்டில் வழங்கிய நாணயங்கள். பணம் என்பது திருவிதாங்கூர் நாணயத்தில் 4 சக்கரத்தின் மதிப்புடைய வெள்ளி நாணயம்; காசு என்பது செப்புக்காசு; திருவிதாங்கூர் நாணயத்தில் ஒரு சக்கரத்திற்கு 16 காசுகள் முன்பு வழக்கத்தில் இருந்தன. இந்தக் காசு இப்பொழுது வழங்கும் ஒரு நயாபைசா போன்ற அமைப்பில் இருந்தது.

## 5. பரிகலப் படலம்

ஐவரை மணந்தெம் கணவர் அடைந்த
துயரெலாம் இங்கே சொல்லி முடியுமோ?
இவரில் ஒருத்தியாய் எளியேன் அடைந்த
குறையெலாம் இங்கே கூறி முடியுமோ?
ஒரு நாள்—

வெட்கம், வெட்கம், மிகவும் வெட்கம்!
துக்கம், துக்கம், பெரிதும் துக்கம்!
மனமும் நாணி வருந்துதே அம்மா!
நாவும் குழறி நடுங்குதே அம்மா!
எப்படிச் சொல்வேன்! யாவற் றிற்கும்

என் தலை விதியை யன் றியிவ் வுலகில்
எவரை நோக இடமுண் டம்மா!—
தீபா வளியோ திருக்கார்த் திகையோ,
நன்றாய் எனக்கு ஞாபக மில்லை;
வீட்டில் ஏதோ விசேஷ முண்டு;

வீரவ நல்லூர் விருந்து முண்டு;
பருப்பு முதலிய பற்பல கறிகள்
வகைவகை யாக வைத்தது முண்டு.

---

16. வீரவ நல்லூர்-நாஞ்சில் நாட்டின் வடபகுதியிலுள்ள ஒரு சிற்றூர்.

வந்த மனிதரும் எங்கள் மன்னரும்
அமுது செய்துகை அலம்ப வெளியில்
இறங்கினர். உடனே, எனக்கு முன்னாய்
வாழ்க்கைப் பட்ட மனைவிய ருக்குள்
இழுப்பும் வலிப்பும் எதிர்ப்பும் வந்தன;
அடியும் பிடியும் கடியு மாயின;
மனிதப் பிறவியில் வந்த வராமென்று
எள்ளள வேனுமோர் எண்ணமி லாதவர்
கொண்டை பற்றிச் சண்டை செய்தனர்!
மண்டை ரத்தம் வடிய விட்டனர்.
என்னால்,
ஆன மட்டும் விலக்கினேன், அம்மா!
ஆகா தாகா தென்றேன், அம்மா!
கெஞ்சிக் கெஞ்சிச் சொன்னேன் அம்மா!
கீழே விழுந்துகும் பிட்டேன் அம்மா!
எதற்கும் அவர்கள் இணங்கினா ரில்லை.
எளியேன் செய்யவே றென்னுண் டம்மா?
கூகூ என்ற கூக்குரல் கேட்டுப்
பக்கத் துள்ளார் பலரும் வந்தனர்.
ஊரார் எல்லாம் ஒன்றாய்க் கூடினர்.
விருந்தின ரெல்லாம் விரலை மூக்கில்
வைத்த படியே மயங்கி நின்றனர்.
முடிவில்,
மேலவீட் டண்ணன் வெள்ளையம் பிள்ளை
நல்ல மனிதர், நடுநிலை யுள்ளவர்,
நாலுகா ரியமும் நன்றாய் அறிந்தவர்,
பட்டுத் தேறிப் பழக்கம் வந்தவர்,

---

19. எங்கள் மன்னர் - கணவர்.

(என்ன செய்யலாம்! இறந்துபோ யினரே!)
வந்தொரு வாறு வழக்கைத் தீர்த்தார்.
'ஒவ்வொரு நாளைக் கொவ்வொரு மனைவி
புருஷன் எச்சில் புசித்திட வேண்டும்;
இடையில்,

தீபா வளியோ, திருக்கார்த் திகையோ,
வேறிம் மாதிரி விசேஷ நாளோ,
வந்திடு மாகில், வரிசை வரிசையாய்
ஐந்திலை யிட்டவை அனைத்திலும் அமுது
படைத்த புருஷன் பருகிய பின்னர்

பரிகலத் துள்ள பதார்த்த மெல்லாம்
மனைவியர் சரியாய் வகுத்துண வேண்டும்
வழக்குகள் ஒன்றும் வரலா காது'எனக்
கூறிப் போயினர்; கூடியிருந்தோர்
யாவரும், 'இதுவே நீதி' என்றனர்.

என்றவர்,
கலகமுண் டான காரண மறிந்து
சிரித்து நின்றார், 'சீசீ' யென்றார்;
'எச்சில் இலைக்காய் இந்தக் களரி
கூட்டுவ ரோ?' எனக் கூறிப் போனார்.

ஐயோ!
துயரம், துயரம், பிறப்பே துயரம்!
பிறப்பினும் துயரம் பெண்மக ளாதல்,
பெண்மக ளாதலிற் பெரிதும் துயரம்
மருமக் கள்வழி வலையிற் படுதல்;

---

64—65. களரி கூட்டுதல் : சண்டையிடுதல்.

வலையிற் பட்டு வருந்தலில் துயரம்ஓர்
காரண வருக்குக் கழுத்தைக் கொடுத்தல்;
கழுத்தைக் கொடுத்தலில் துயரம் கருணை
இல்லா மாமிக் கிசைய நடத்தல்;
இசைய நடத்தலில் துயரம் என்போல்

பாரக மீதிப் பஞ்சபா விகளுள்
ஒருத்தி யாக உயிர்பெற் றிருத்தலே!

---

72. காரணவர்—குடும்பத் தலைவர்.

# 6. நாகாஸ்திரப் படலம்

இம்முறை யாக இருக்கும் காலம்,எம்
கணவரை ஒருநாள் மருமகன் கண்டு
வழக்குப் பேச வந்தான் அம்மா!
வந்தவன்,
அம்மான் என்றோர் அடக்கமில் லாமல்,
மாமன் என்றோர் வணக்கமில் லாமல்,
கூறின மொழியெலாம் கூறுவேன், அம்மா!
"ஆத்தாள் செத்த அடியந் திரச்செலவு
ஆயிரம் பணத்துக் கதிகம் வருமோ?
விளையை நிலமாய் வெட்டித் திருத்த
பனையைவிற்றபணம்போ தாதோ?
கண்ணி யம்மை கலியா ணத்தில்
கால்கா சுமக்குக் கைப்பொறுப் புண்டோ?
மருமகள் என்றொரு மஞ்சா டிப்பொன்

---

8. அடியந்தரச் செலவு—கருமாதிச் சடங்குக்குரிய செலவு.

10-11. விளை—புன்செய் நிலம். புன்செய் நிலத்தில் நின்ற பனைமரங்களை வெட்டின பிறகுதான் அதை நன்செய் நிலமாகத் திருத்த முடியும். வெட்டின பனைகளை விற்றதனால் கிடைத்த பணம், புது நிலம் திருத்துவதற்குப் போதாதோ என்று மருமகன் காரணவரிடம் கேட்கிறான்.

14. மஞ்சாடி—கழஞ்சில் இருபதிலொரு பாகம்; பொன்னை நிறுக்கும் ஓர் அளவு.

குச்சா கிலும்நீர் கொடுத்ததும் உண்டோ?
ஆண்டு தோறும் ஆதா யத்தில்
ஆயிரம் ரூபாய்க் கையம் இல்லையே!
ஏழாண் டாக இந்த மிச்சம்
எங்கே போச்சுது? என்னடா, அப்பா!
கேட்பா ரில்லையோ, கேள்வியு மில்லையோ!

நெட்ட ரமாவும் நெடுங்கண் வயலும்
யாரிடம் கேட்டுநீர் ஈடு கொடுத்தீர்?
கடனுக் கென்ன காரணம்? சொல்லும்.
ஊரில் காரிய விசாரம் உமக்கு
வேண்டாம் என்றேன்; 'விடுவனோ' என்றீர்.

கணக்கன் உமது கழுத்து முறிய
எல்லாச் சுமைகளும் ஏற்றிவைத் ததனால்,
அம்மன் வகைச்சி ராயிரம் ரூபாய்
தெண்ட மிறுத்த கதைதெரி யாதோ?
உச்சிக் கொடைக்குப் பிச்சி வெள்ளையும்

கொழுந்தும் தாழம் பூவும் கொண்டு
வரவில்லை யென்றுநீர் வைரவன் மகனை
எட்டி யடித்த ஏதுவி னாலே.

---

15. குச்சு-காதிலணியும் ஒரு சிறு ஆபரணம்.

21. நெட்டரமா, நெடுங்கண் வயல்: வயற்பெயர்கள்.

26. கணக்கன்-சமுதாய வரவு செலவுகளை எழுதுவதற்காக நியமிக்கப்பட்டிருந்த கணக்கப்பிள்ளை.

28. அம்மன் வகை-ஊருக்குப் பொதுவான தேவி கோவிலைச் சேர்ந்த சொத்து.

30—32. உச்சிக்கொடை-சிறு தெய்வங்களின் கோவில்களில் உச்சி வேளையில் நடத்தும் விசேஷ ஆராதனை. இதற்குப் பிச்சிப்பூ முதலிய பூக்களை ஊர் வேலைக்காரர் கொண்டுவருவது வழக்கம்.

எத்தனை ரூபாய் வாரி யிறைத்தீர்?
இதுநாள் வரையிலும் எங்கட் காக
எதைநீர் செய்தீர்? எதைநீர் தந்தீர்?
மக்கட் கெல்லாம் வாரிக் கொடுத்தீர்.
ஒருபூ வாகிலும் உழக்கு நெல்லு
பொலியள விந்தா கொண்டு போஎனத்
தந்ததும் உண்டோ? சரி, சரி, இன்னும்
உள்ள நிலங்களை ஒவ்வொன் றாக
ஒற்றி கொடுத்திடும்; மலரணை ஓலைகள்
எத்தனை வேண்டுமோ எழுதியும் வைத்திடும்;
பேர்க்கூ லிப்பிர மாணம் செய்யும்;
இட்ட தானம் எழுதிக் கொடுத்திடும்;
வேண்டு மானால் விலையும் கொடுத்திடும்;
மனைவி பேர்க்கும் மக்கள் பேர்க்கும்
உகந்துடை மைப்பிர மாணம் ஒன்றுநீர்
இருக்கும் போதே எழுதியும் வைத்திடும்;
மக்களை வீட்டில் வாழ வைத்திடும்;
எங்களைத் தெருவில் இறக்கி விட்டிடும்,
ஆசை அங்கே, அன்பும் அங்கே;
பூசை இங்கே! போசனம் இங்கே!

---

38. ஒரு பூ - பூ என்பது இங்கே அறுவடைக் காலம். வருஷத்திற்கு ஒரு முறை விளையும் நிலத்தை ஒரு பூ என்றும், இருபோகம் விளையும் நிலத்தை இரு பூ என்றும் சொல்லுவர். ஒரு பூ-ஒரு போகம்.

42. மலரணை-பேரிரவல் (பினாமி)

43. பேர்க்கூலிப் பிரமாணம்-தன் பெயருடைய பேரனுக்குப் பாட்டன் எழுதிக் கொடுக்கும் நன்கொடைப் பிரமாணம்.

48. உகந்துடைமை-நாஞ்சில் நாட்டு வேளாளரிடையே கணவனுடைய சொத்தில் மனைவி மக்களுக்குரிய பாக உரிமை.

ஆரைக் கேட்டு நீர் ஐந்துகல் யாணம்
அடுக்கடுக் காகச் செய்தீர்? ஐயா!

பட்டப் பெயரும் 'பஞ்சகல் யாணிப்
பிள்ளை' யென்று நீர் பெற்றுவிட் டீரே!
அன்னியர் பொருளை அபகரிப் பதிலும்!
ஊரார் பொருளை உண்டுவாழ் வதிலும்,
கைதேர்ந் தவர்கள் காரண வர்களே!

கள்ளர் மறவர் கணக்கரும் இவருக்கு
எள்ளள வேனும் இணையா வாரோ!
கன்னக் கோலும் கையில் படாமல்,
எழுது கோலும் இறகும் எடாமல்,
இரவும் பகலும் இஷ்டம் போலத்

திருடும் திறம்இச் சீமையில் எவருக்கு
உண்டு? இதனை உணர்பவ ருண்டோ?
கள்ளன் கஜானாக் காவலன் ஆனால்,
கொள்ளை யடிப்பில் குறைவைப் பானோ?
செல்வ மெல்லாம் சிதையக் காரணம்,

சிறுவர் சோம்பித் திரியக் காரணம்,
மங்கையர் கண்ணீர் வடிக்கக் காரணம்,
வழக்குகள் மேன்மேல் வளரக் காரணம்,
குடும்ப நிலைமை குலையக் காரணம்,
நாஞ்சில் நாட்டுக்கோர் நாச காரணம்
எல்லாம் நீங்கள் என்றறிந் தல்லவோ

---

56. பஞ்சகல்யாணிப் பிள்ளை - ஐந்து கல்யாணம் செய்து கொண்டவராகையால், இந்த பெயர் ஊரில் ஏற்பட்டுவிட்டது.

61. கள்ளர், மறவர், கணக்கர் - இவர்கள் பிறர் பொருள்களை அபகரிப்பர் என்று சாமானிய மக்கள் சொல்வார்கள்.

காரண வர்எனும் காரணப் பெயரைத்
தந்தவர் உமக்கும் அந்தக் காலமே.
காரணத் தீனம் கடிய தீனம்;
கண்டு ரத்தில் மருந்து கருத்தாய்க்

கொடுத்தா லன்றிக் குணமா காது.
போகர் மச்ச முனிபுலிப் பாணியர்
கருணா னந்தர் கருவூர்த் தேவர்
அகத்தியர் முதலிய ரிஷிகள் அனைவரும்
வைத்தியம் மந்திர வாதம் இவற்றைப்

பாட்டுக் கணக்காய்ப் பாடி வைத்தனர்!
ஏட்டுக் கணக்காய் எழுதி வைத்தனர்!
இவரும் காரண தீனம்இன் னதென்று
அறிந்தொரு குளிகை லேகியம் அல்லது

---

79. காரணத் தீனம்—காரணவ ஸ்தானம் என்ற சொற்களை மருமகன் கோபத்தில் இவ்வாறு இழிவாகக் கூறுகிறான்; தீனம்-நோய்; கடிய தீனம்—நீக்க முடியாத நோய்.

80. ஜன்னி அதிகரித்திருக்கும்பொழுது கண்டௌஷதம் கொடுப்பதுண்டு. கண்டுரம்-கண்டௌஷதம்.

82. போகர்- இவரைப் போகநாதர் என்றும் சொல்வர். பதினெண் சித்தரில் ஒருவர்; மருத்துவ நூல்கள் பலவற்றின் ஆசிரியர்.

மச்சமுனி - இவரும் பதினெண் சித்தரில் ஒருவரே; மருத்துவ நூல் இயற்றியவர்.

புலிப்பாணியர்- வைத்தியம், ஜாலம் முதலியவைபற்றி நூல்கள் இயற்றிய ஒரு சித்தர்.

83. கருணானந்தர், கருவூர்த்தேவர் - இவர்கள் வைத்தியம் மந்திரவாதம்பற்றி நூல்கள் இயற்றியவர்களாவர்.

84. அகத்தியர்: இவர் ஒரு முனிவர். தமிழில் முதல் இலக்கண நூல் இவர் செய்தது என்பர். இவர் பெயரால் பல வைத்திய நூல்களும் உள்ளன.

சூரணம் அதற்குச் சொன்னதும் உண்டோ?
அஷ்டாங் கிருத வைத்தியர், 'ஐயா
எல்லாப் பிணியிலும் பொல்லாப் பிணியிது.
எங்கள் நாட்டில் இப்பிணி யாலே
வருந்தா திருக்கும் மனிதர் சிலரே;
இதுநாள் வரையும் இப்பிணி தீர,

கஷாய மொன்று கண்டறிந் தவரிலை,
வயக்கரை மூசும் வைத்திய ரத்னமும்
எம்மா லாகா தென்றுகை விட்டிடில்
பிணியின் கொடுமை பேசவும் வேண்டுமோ?'
என்று கூறி யிருந்தனர், என்செய்வார்?

இங்கிலிஷ் டாக்டரும் இதற்கு மருந்துகள்
இருப்ப தாக இயம்பிடக் காணோம்.
இப்பிணி போல வெறுப்பை எழுப்பும்
பிணியிவ் வுலகில் பிறிதொன் றில்லை
ஈக்களும் தேடி யீட்டிய தேன்போல்

பலரும் பலநாள் பாடு பட்டுக்
கூட்டி வைத்த குடும்ப முதல்இத்
தீனம் கொண்டவர் தீண்டுவ ரேல்உடன்
ஆனை தின்ற விளாம்பழ மாம்; அதற்கு
ஐய மில்லை; அறியார் யாரே!

---

90. அஷ்டாங்கிருத வைத்தியர் - அஷ்டாங்கஹிருதயம் வடமொழியிலுள்ள ஒரு வைத்திய சாஸ்திரம்.

97. வயக்கரை மூசு, வைத்திய ரத்தினம் - இவர்கள் மலையாளத்திலிருந்த பிரபல வைத்தியர்கள்.

107—108. இத்தீனம் என்பது; காரணவ ஸ்தானத்தைக் குறிக்கிறது.

பாரும், பாரும், பத்திர மாயிரும்!
குடும்ப தோஷி என்றுமைக் கொண்டு
கோர்டில் கேஸு கொடுப்பேன் பாரும்.
உண்மை யாக உம்மையும் அதனில்
சாக்ஷி போட்டு சமன்ஸை அனுப்பி,

வரவில்லை யானால் வாரண்டும் அனுப்பி,
(காலரை செலவாம் காரிய மில்லை)
கூட்டில் ஏற்றிக் குறுக்கு மறுக்காய்
'கிராஸும்' கேட்டுக் கேவல மாக்கி
விடவிலை யானால், வீர பத்திரன்

மகனென் றென்னை மதிக்கவே வேண்டாம்.''

---

112. குடும்ப தோஷி - குடும்ப காரியங்களுக்குத் துரோகம் செய்தவன்.

## 7. கருடாஸ்திரப் படலம்

என்று மருமகன் இயம்பிய மொழிகளை
மாமன் கேட்டு, மனமிக நொந்து,
"நல்ல தப்பா! நாகாஸ் திரங்கள்
இத்தனை தானோ? இனிவே றுண்டோ?
உன்னைச் சொல்ல ஒருகுறை யில்லை.

கலியன் முற்றின காலமி தல்லவோ?
என்மாம னார்இறந்து வருஷம்எட் டாக
யான்படும் பாடெலாம் யாரே அறிபவர்!
நாலாண் டாக நல்ல விளைவிலை;
செலவு கழிந்ததே தெய்வச் செயலாம்;

அடைமழை யாலே அழிந்ததோர் வருஷம்;
வெயிலின் கொடுமையால் வெந்ததோர் வருஷம்;
போன ஆண்டில் பொலியே இல்லை;
கொக்குநோய் விழுந்து குடியைக் கெடுத்தது;
கார்விளை வில்லை, பசானம் கரிந்தது;
விளைவிலை யாயினும் வீட்டுச் செலவில்

---

14. கொடுக்குநோய்-நெற்பயிருக்கு ஏற்படும் ஒரு வகை நோய்.

15. கார்-ஆவணி புரட்டாசி மாதங்களில் விளையும் நெல். பசானம்-மாசி பங்குனி மாதங்களில் விளையும் நெல்.

ஒருகுறை யேனும் உண்டோ? அப்பா!
பிள்ளைப் பேறும் பிறந்த நாளும்
இல்லா வருஷம் இல்லையே அப்பா!
குடும்பச் செலவுகள் கூறி முடியுமோ?
ஒன்றா? இரண்டா? ஒன்பதா? பத்தா?
ஆண்டு தோறும் ஆலடி மாடன்
கொடைக்கு ரூபாய் கொஞ்சமா செல்லும்?
போன கொடைக்குப் புதிதாய் வந்த
வில்லுக் காரி வீரம் மைக்கு
நாலு சேலையும் ரூபாய் நாற்பதும்
கொடுத்தது நீயும் கூடி யல்லவா?
எனக்கு,
சல்லடம் கச்சை தைக்க மாத்திரம்
ஐம்பது ரூபாய் ஆச்சுதே! அப்பா!
போக்கில் லாத பயல்களைப் போலத்
துணியை அரையில் சுற்றிக் கொண்டு
நானும் ஆடினால் நன்றா யிருக்குமா?
காணவன் என்றொரு கணிசம்வேண் டாமா?
பிலே!
சன்னதி முன்னே தறித்த கடாவுக்கு
இருபது ரூபாய் எண்ணிவைத் தேனே!
நீங்கள்,
அப்பன் மக்கள் அனைவரும் இங்கே
இருந்து தின்றது போதா தென்று,

---

22. ஆலடி மாடன் கொடை-ஆலமரத்தினடியிலுள்ள மாடன் என்னும் சிறு தெய்வத்துக்குச் செய்யும் சிறப்பு.

25. வில்லுக்காரி - வில்லுப் பாட்டுப் பாடுபவள். வில்லுப் பாட்டுப் பாடும் ஆண்களைப் புலவனார் என்று அழைத்து வருகின்றனர்.

35. பிலே-பயலே.

கொடியிறைச் சிகளும் கொண்டுபோ னீரே?
இந்தச் செலவுகள் ஏற்படு வதனால்
மாடனை வணங்கா திருக்க லாமா?
கடன்பட் டாயினும் காலா காலத்தில்
வேண்டும் காரியம் செய்யவேண் டாமா?
கொடைஓ ராண்டு கொடுக்க முடங்கினால்
குடும்ப தோஷமும் குறையும் வராதோ?
அடே!
ஆத்தாள் செத்து அடியந் திரச்செலவு
ஆயிரம் பணமா? ஆறா யிரம்பணம்
என்று சொல்லவுன் வாய்க்கிய லாதோ?
பந்தல் இல்லையா? பாடை இல்லையா?
பறைமே ளங்களும் பாட்டும் இல்லையா?
நாலு தெருவும் நடைமாற் றில்லையா?
காள மில்லையா, கருங்கொம் பில்லையா?
களியல் கூத்தசை கம்புகள் இல்லையா?

---

41. கொடி இறைச்சி-ஆட்டிறைச்சி முதலியவற்றைக் கெடாமல் காப்பதற்காகக் கயிற்றில் கோத்து வெயிலில் உலர்த்துவதுண்டு. இப்படிக் 'கொடி'யில் உலர்த்தினமை யால் 'கொடியிறைச்சி' என்ற பெயர் வந்தது.

53. பறைமேளம்-பறையர் அடிக்கும் தப்பட்டை.

54. நடைமாற்று: நடத்தற் பொருட்டு வழியில் விரிக்கும் ஆடை.

55. களியல் (கழியல்) கோலாட்டம்; வயதானவர்கள் இறந்தபோது பறையர் முதலியோர் சிறு கோல்களைக் கையில் வைத்துக்கொண்டு பிரேதத்தின் முன்னே ஆடிப் பாடிக் கோலாட்டம் அடித்தல் வழக்கம். கூத்து: இந்தச் சந்தர்ப்பத்தில் வேஷம் போட்டுக்கொண்டு ஆடுதல். அசைகம்பு-சிலர் நீண்ட கழைகளைக் கையில்ஏந்தி அவற்றை அசைத்துப் பாடி ஆடுகிற வழக்கமுண்டு. இந்தக் கழைகள் 'அசைகம்பு' எனப்படும்.



முரசு வாத்திய முழக்க மில்லையா?
என்ன இல்லை என்தாய்க் கப்பா?
தோசை ஆயிரம் சுட்டு மூலையில்
ஆசை தீரவைத் தமுத தில்லையா?

பத்துச் சாக்குப் பயறும் ஒன்றாய்
அடுத்த கிழமையில் அவிக்க வில்லையா?
தேங்காய்,
இரண்டாயிரத்துக் கதிகம் எடுத்து
வீடு வீடாய் விளம்ப வில்லையா?

பதினா றன்று, பார்ப்பார்க் கெல்லாம்,
பட்டுக் குடையும் பாத ரட்சையும்
கட்டிலும் மெத்தையும் கடுக்கன்மோ திரமும்
பாயச பாத்திரம் பஞ்சபாத் திரமும்
அமுது படியும் அளிக்க வில்லையா?

மேலும்,
பசுவும் கன்றும், பத்து மரக்கால்
நிலமும் தானமும் நெறிதவ றாமல்
செய்ய வில்லையா? தினமும் வெற்றிலைச்
செலவும் உனக்குத் தெரியா தோடா?

படிப்புரை யருகில் வைத்த படிக்கம்
பத்திர காளி பலிபீ டம்போல்
ஆனதை நீயும் அறியா யோடா?

---

69. பஞ்சபாத்திரம் - அகன்ற வாயுள்ள தீர்த்தப் பாத்திரம்.

72-73. பத்துமரக்கால் நிலம் - ஒரு ஏக்கரை ஒரு கோட்டை விதைப்பாடு என்பது நாஞ்சில் நாட்டு வழக்கு. ஒரு கோட்டை இருபத்தொரு மரக்கால்.

76. படிப்புரை - ஒட்டுத் திண்ணை.

பத்துப் பெண்கள் பட்டினி கிடந்து
பருத்திப் பொதிபோல் பதினா றாம்நாள்

வெளியில் வந்திட வேண்டு மானால்,
அவர்,
எத்தனை தோசை இட்டலிக் கெல்லாம்
ஏம காலரா யிருப்பார்? அப்பா!
இட்ட செலவெலாம் எடுத்துச் சொன்னால்

எண்ணி முடியுமா? எழுதி முடியுமா?
சிதம்பரக் கட்டளை, செந்திற் கட்டளை,
மதுரைக் கட்டளை, வகைக்கொரு பூவில்
எண்பது கோட்டை நெல்லில் உழக்குக்

79-81. யாராவது ஒருவர் மரணமடைந்தால் இறந்தவருடைய பந்துக்களில் சில பெண்கள் பதினாறு நாளும் பட்டினி கிடப்பார்கள். இந்தப் பட்டினிக் காலத்தில் சோற்றைத் தவிர மற்றெல்லாப் பண்டங்களையும் உபயோகிப்பதில் ஆட்சேபணையில்லை. ஆதலால், சில பெண்கள், பண்டம் பலகாரம் ஏராளமாகத் தின்னலாமென்ற எண்ணத்தோடு பட்டினி கிடப்பதுண்டு. அவர்களைப் பதினாறு நாளும் கழிந்த பிறகு பார்த்தால், அவர்களுடைய உடம்பு பட்டினியால் மெலிந்திராது; முன்னையிற் பார்க்கிலும் பருமனாக இருக்கும். பெயரளவில் தான் பட்டினி ஆகாரம் மற்றக் காலங்களைப்பார்க்கிலும் அதிகமாயிருக்கும். பருத்திப் பொதி-பஞ்சு மூட்டை.

87-88. கட்டளை - கோவிலுக்கு ஒரு விசேஷங் குறித்து ஏற்படுத்தப்பட்ட தருமம். சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் ஆகியவை தமிழ் நாட்டில் மிகப் பிரசித்தி பெற்ற தேவாலயங்கள். இங்கெல்லாம் வருடந்தோறும் தருமத்தின் பொருட்டுக் கொடுத்துதவ எண்பது கோட்டை நெல் வேண்டும் என்கிறார் காரணவர்.

89. கோட்டை - இருபத்தொரு மரக்கால் கொண்ட முகத்தல் அளவை; பட்டணம் படிக்கு எழுபத்தைந்து படி

குறைந்த தானால் கொடுக்க முடியுமா?
பேயும் அஞ்சும் பெரும்ப ழஞ்சி
ஐய னிடத்தில் ஆண்டு தோறும்
கொண்ட கடனைக் கொடுக்கா விட்டால்,
அவர், வயிற் றைஊத வைத்திடு வாரே!
குறளியை ஏவிக் கொன் றிடு வாரே!
நினைத்தி ராமல் நிதமும் எத்தனை
செலவுகள் வந்திடும், தெரியுமா உனக்கு
'சானல் வாச்சர்' சந்தனத் தேவர்க்கு?
'அட்ரஸ்' கொடுத்த வகைக்கோ ராறு

---

91-95. பெரும்பழஞ்சி என்பது திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள நான்குனேரியைச் சேர்ந்த ஒரு சிற்றூர். அதில் ஒரு பிராமணக் குடும்பத்திலுள்ளவர்கள் பெயர் பெற்ற மந்திரவாதிகளாயிருந்தார்கள். அவர்கள் இந்திர ஜாலம், மந்திர ஜாலம், மகேந்திர ஜாலம், கூடுவிட்டுக் கூடுபாய்தல், ஜலஸ்தம்பம், வாயுஸ்தபம் முதலியவற்றில் மிகவும் தேர்ந்தவர்களென்று சொல்லுவதுண்டு. இவர்கள் ஆண்டுதோறும் இப் பக்கங்களிலுள்ள ஊர்களுக்கு வந்து ஜால வித்தைகள் செய்து பணம் பெற்றுப் போவதுண்டு. யாரேனும் தாங்கள் கேட்டபடி பணம் கொடுக்கவில்லையானால், தங்களுடைய ஜால வித்தைகளினால் அவர்களுக்குப் பலவிதத் தீங்குகள் செய்துவிடுவதாகப் பயமுறுத்துவார்கள். ஏழை ஜனங்களும் பெரும்பழஞ்சி ஐயர் பணம் கொடுக்கவில்லையானால், வயிற்றுவலி உண்டாக்கிவிடுவார் என்றும், குறளியை ஏவி விட்டுக் கூரை, வைக்கோற் போர் முதலியவற்றில் தீயைக் கொளுத்தி விடுவார் என்றும் நம்பிப் பயமடைவார்கள். கொண்டகடன் - கட்டாயமாகக் கொடுத்துத் தீரவேண்டிய தண்டம் (மன மில்லாமல் நிர்ப்பந்தத்திற்காகக் கொடுக்கும் தானம்.)

95. குறளி - குறளிப் பிசாசு.

98-99. சானல் வாச்சர்-நீர்ப்பாசன இலாகாவில் எட்டு ரூபா சம்பளம் பெறும் ஒரு வேலைக்காரன். வாய்க்காலில் தண்ணீர் விடுவது இவன் இஷ்டத்தைப் பொறுத்தது. அட்ரஸ் - உபசாரப்பத்திரம்.

ரூபாய் இன்று ரொக்கம் கொடுத்தேன்

இனி,
இந்த மாதம் இருபதாம் தியதி
'கார்டர்' அண்ணன் காடு மாறிப்
போகிறார். அவரைச் சும்மா போகச்
சொல்ல லாமோ? சொல்நீ அப்பா!

இப்படி யிப்படி இன்னும் செலவுகள்
எத்தனை யோவரும்! எண்ணில் அடங்குமோ?
உழவன் மீதி உழவுக் கம்பென
உலகம் சொல்வதும் உண்மை அல்லவோ?
பிலே! நீ,

ஏழு வருஷமாய் இங்கிலீஷ் படித்தையே,
ஏ,பி,ஸி,டி, எழுதத் தெரியுமா?
எத்தனை பணத்தை வாரி யெறிந்தேன்.
எல்லாம் பாழுக் கிறைத்த நீர்போல்
ஆக்கி விட்டாயே, அவலட் சணமே!

அந்தச்
சாஸ்தாங் கோவில் சாந்தி அய்யர்
மகனுக் கெத்தனை வயது காணும்?
அவன்,
படித்து பி.ஏ. 'பாசாய்', நல்ல
பதவியிலிருப்பதைப் பார்க்க வில்லையா?
உண்மை, உண்மை! ஒருதடை யில்லை.

103. கார்டர் - காட்டிலாகவில் குறைந்த சம்பளத்தில் வேலைபார்க்கும் ஓர் ஊழியன். இவனைப் போன்றவர்களுக்குங் கூட 'அட்ரஸ்' கொடுப்பதும், 'ஸெண்ட் ஆப்' நடத்துவதும் உண்டென்று சொல்லி, பொதுவாக, தகுதியில்லாத உத்தியோகஸ்தர்களுக்கும் இந் நாட்டில் உபசாரங்கள் செய்வதை ஏளனம் செய்கிறார் ஆசிரியர்.

பட்டினி கிடந்து படிப்பவர் மட்டுமே
பரிக்ஷை தேறுவர் பட்டமும் பெறுவர்!
அன்றி,
ஆமை வடைக்காய் அரைஞாண் பணயம்,
போளிக் காகப் புத்தகம் பணயம்,
சீடைக் காகச் சிலேட்டுப் பணயம்,
முறுக்குக் காக மோதிரம் பணயம்,
காப்பிக் காகக் கடுக்கன் பணயம்,
'காலரு'க் காகக் காறை பணயம்,
கூத்துக் காகக் குடையும் பணயம்,
இப்படி யாக எல்லாம் பணயம்
வைத்துத் தின்னும் வயிற்றுக் கள்வர்
வாழ்ந்திடு வாரோ? வாழ்ந்திடு வாரோ?
முருக்குத் தடிபோல் வளர்ந்தமுட் டாளே!
நீ! பணயம் வைத்த பண்டம் அனைத்தும்
எத்தனை தரம்நான் மீட்டி யெடுத்துத்
தந்தேன் அப்பா; தந்தேன் அப்பா!
அடே,
ஆறு வருஷமாய் ஐக்கோர்ட் வரையும்
வழக்குப் பேசிஎன் மாமனா ருக்குப்
பணம்கடன் கொடுத்த பயல்களை எல்லாம்
பஞ்சாய்ப் பறத்தின பாதர் சிங்கமாம்
என்னையும் குடும்ப தோஷி என்றுநீ
சொல்லவந் தாயே! சொல்லவந் தாயே!

---

136. முருக்குத்தடி: முள்ளு முருங்கை மரத்தின் அடி மரம். இது பார்வைக்குப் பெரிதாக இருந்தாலும் மற்ற மரங்களைப்போல உறுதியுடையதல்ல. ஆகவே, இதை உபயோகமற்றதாகத் தள்ளிவிடுகின்றனர்.

141. பாதர் சிங்கம் - பஹதூர் சிங்கம்

விலைக்கு விற்ற விளையை மைனர்
வியாச்சியம் செய்து, மீட்டினது உன்தன்
அப்பனா? நானா? ஆரடா? சொல்லு!
அன்பாய்ப் பேசும்உன் அப்பனால் உனக்கு
அரைக்கா சுக்கோர் ஆதாய முண்டோ?
மூத்த
காரணவர் பெற்ற கன்றுகள் கூடி
ஆயிரம் ரூபாய்க்கு ஆவ லாதி
வைத்ததை நீயும் மறந்தா யோடா?
அந்த
உகந்துடை மைப்பணம் ஒன்றும் அவருக்கு
இல்லா தாக்க என்னபா டெல்லாம்
பட்டேன் அப்பா! பார்த்தது மில்லையோ?
குசும்பன் சாமியும், குண்டுணிச் சுப்புவும்
உன்
அப்பனும் கூடி ஆலோ சனைகள்
செய்த தெல்லாம் தெரியும், தெரியும்!
அறிந்த வித்தைகள் அனைத்தையும் அவரைக்
காட்டச் சொல்போ, காட்டச் சொல்போ!
கோர்ட்டில் வியாச்சியம் கொடுக்கச் சொல்போ!
செருப்பா லடித்தா செலவுக்கு வாங்குவார்?
வாங்கட்டும் வாங்கட்டும்! வட்டி முடையட்டும்!
நாஞ்சி னாட்டுக்கு நன்மையுண் டாகட்டும்!
இனியுள காலம் எக்கா ரணவனும்
காடும் மேடும் கரையும் சுற்றி,

153. கன்றுகள்: மக்களை நிந்தையாகக் கன்றுகள் எனக் கூறினர்.

154. ஆவலாதி - பிராது.

ஊணும் உறக்கமும் இன்றி உழைத்து,
விளையும் விளைவெலாம் வீசித் தூற்றி,
ஈரமும் பதரும் இல்லா தகற்றி
சாக்கில் அளந்து தலையில் எடுத்து,

மாதா மாதம் மருமகன் ராஜா
திருவுளங் கொண்டெழுந் தருளி யிருக்கும்
கொட்டா ரத்தில் கொண்டு சென்று,
அவர்,
குறட்டைச் சுருதியில் கும்ப கர்ணப்

படலம் அன்பாய்ப் பாரா யணம்செய்யும்
காலமா யிருந்தால், காத்துநின்று, அல்லது,
நடுமனை கீறி 'நாயும் புலியும்'
இஷ்டர்கள் கூட இருந்தி ழுக்கும்
வேளையா யிருந்தால் விலகிநின்று, அல்லது,

புகையிலை வாயிற் போட்டுக் கொண்டு
பொடியும் மூக்கில் ஏற்றுக் கொண்டு
'இறக்கு, வெட்டு' என இரைந்து கொண்டு
இடையிடைச் சண்டையும் எழுப்பிக் கொண்டு,
பக்க மந்திரிகள் பலரொடும் சீட்டுக்

கச்சேரி செய்யும் காலமா யிருந்தால்,
ஓரிடம் மாறி ஒதுங்கி நின்று
தாயப் போர்க்கொரு தடைசெய் யாமல்,

---

178. கொட்டாரம் - அரண்மனை.

183. நாயும் புலியும்: பதினைந்து நாயும் மூன்று புலியும் என்ற விளையாட்டு (பதினைந்தாம் புலி). நடுமனை கீறுதல் - இந்த விளையாட்டு விளையாடுவதற்காகவுள்ள கட்டம் வரைதல்.

193. தாயப்போர்: தாயம் ஆடுதல், கட்டமாடுதல்.

குடித்தன மில்லாக் குறிகள் அறிந்து,
தடித்தன மில்லாச் சமயம் பார்த்து,

'அரசே! பெருந்திரு அமுதுக் காக
இம்மா தத்துக்கு ஏற்படும் நெல்லிதை
அளந்து களஞ்சியத்து ஆக்கிடக் கற்பனை
பாலித் தருள்வீர்' என்று பணிந்து
நிற்கும் படிக்கு நீயும் கோர்ட்டுத்

தீர்ப்பைப் பெற்றுச் சீக்கிரம் வாபோ!
உள்ளநா ளெல்லாம் உங்கட் காகநான்
உழைத்தது இந்த ஊர்அறி யாதோ!
பெண்டாட் டிக்கும் பிள்ளை கட்கும்
இத்தனை நாளாய் எத்தனை கொடுத்தேன்?

உண்ணச் சோறும் உடுக்கத் துணியும்
கொடுத்தால், என்ன குறைவாய் விடுமோ?
அடிமைகள் போல்இவர் அத்தனை வேலையும்
செய்வதும் உனக்குத் தெரியா தோடா?
வயலைப் பார்த்து வாஎனில் 'கிழட்டுப்

பயலே! உனக்குப் பயித்தியம்' என்பாய்!
'கொத்தை அளந்து கொடு'என் றால்,நீ
வைத்த ஆளோ? மாட்டேன் என்பாய்!
போன பூவில் புளியடிச் சூடு

194. இரு பொருள்: வேசியும் கள்ளும்.

196. பெருந்திருவமுது: கடவுளுக்குப் படைக்கும் பெரிய நிவேதனம்; இங்கே பரிகாசமாக மருமகனுடைய போஜனத்தைக் குறிப்பிடுகிறது.

212. கொத்து: வயல் அறுவடை செய்தவர்களுக்குக் கொடுக்கும் நெற்கூலி.

214. புளியடி - ஒரு வயலின் பெயர். சூடு - நெற்கதிரின் குவியல்.

வட்டம் தள்ளி வரும்போது உன்னிடம்,
'களத்தில் சென்று கண்காணி' என்றேன்;
அந்தப் படியே அவ்விடம் சென்றுநீ
நிமிஷப் பொழுதில் நெல்அரைக் கோட்டை
கடத்தி விட்ட கதையும் எனக்குத்
தெரியா தோடா? திருட்டுப் பயலே!

மறுநாள்,
விடியற் காலம் விசாரிப்புக் காரன்
சாக்கும் இருபதாம் நம்பர் 'ஷாப்பில்'
இருந்தது கண்டுவந்து என்னிடம் சொன்னான்,
வெளியில் சொன்னால் வெட்க மல்லவோ?
ஊரும் நாடும் ஒன்றாய்ச் சிரிக்குமே!
என்றுபே சாது இருந்து விட்டேன்.
அடே,
செப்பில் கிடந்த திருக்குப் பூஅன்று
எப்படி இறங்கி இரண்டாம் குடியாள்
கொண்டையில் சென்று குடியே றியது?
என்னைக் குடும்ப தோஷி யென்று
கூற உனக்குவாய் கூச வில்லையோ?

---

215. வட்டம் தள்ளுதல் - கடா விடுதல் (போரடித்தல்)

223. சாக்கு-கோணிப்பை. நெல் களவுசெய்து கட்டிக் கொண்டு போன சாக்கைக் குறிக்கின்றது. இருபதாம் நம்பர் ஷாப்பு-இங்கே கள்ளுக்கடை.

230. வேசியர் குடும்பங்களை எண்ணாற் குறிப்பது வழக்கம்.

குடும்பத் துக்கொரு குறையும் வராமல்
காரியம் பார்க்கும் கார ணவர்களில்,
எல்லா வகையிலும் என்னைப் போல
நல்லவர் இந்த நாஞ்சில் நாடு
பன்னி ரண்டு படாகையில் உண்டோ?''
என்று வீரம் பேசி எழுந்தனர்.

---

238. பன்னிரண்டு படாகை: படாகை - ஒரு நாட்டின் சிறு உட்பிரிவு. முற்காலத்தில் நாஞ்சில் நாடு பன்னிரண்டு படாகைகள் அல்லது பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருந்தது. அவையாவன:

1. மேல் படாகை
2. நடுவுப் படாகை
3. அழகிய பாண்டியபுரம் படாகை
4. அனந்தபுரம் படாகை
5. தாழக்குடிப் படாகை
6. படப்பற்றுப் படாகை
7. கோட்டாற்றுப் படாகை
8. பறக்கைப் படாகை
9. தேர்ப் படாகை
10. சுசீந்திரம் படாகை
11. அகஸ்தீசுவரம் படாகை

## 8. வாழ்த்துப் படலம்

......இக்கொடு மொழிகளாம்
கருதற் கரிய கருடாஸ் திரங்கள்
பலவும் நெஞ்சிற் பாய, மருமகன்
புண்பட் டுள்ளம் பொறுக்க முடியாது,
ஐயோ! என்றுகண் ணீர்விட்டு அழுது,
தந்தை தாயார் தம்மிடம் சென்று
விளைந்த எல்லாம் விரிவா யுரைத்தான்;
கோபம் பொங்கிக் கொதித்து வரும்படி
சிற்சில இடையிடை சேர்த்தும் கொண்டான்.
செப்பிய சொற்கள் தீயிற் காய்ச்சிய
கம்பிகள் போல்இரு காதும் நுழைந்திட,
வீர பத்திரப் பிள்ளை வெகுண்டு,
கால்நிமி ஷத்துஎன் கணவரைக் கண்டு,
"அடடா மூடா! அதர்மசண் டாளா!
வஞ்சகா! கொடிய மறவா! குறவா!
நெஞ்சில் இரக்கம் இல்லா நீசா!
மடையா! நீயென் மகனை நோக்கி
ஊத்தை வாயால் உளறின மொழிகளை
இன்னும் ஒருமுறை என்முன் வந்து
சொல்லடா பார்ப்போம் சொல்லடா பார்ப்போம்
பள்ளிப் பையனை, பதினா றாண்டு
திகையாப் பாலனை, தெரியாச் சிறுவனை,

2. ஏட்டிற் பொடிவு.
22. திகையா-பூர்த்தியாகாத

கன்னியும் காப்பும் காணாக் குமரனை,
கள்ளன் என்றும் கபடன் என்றும்,
கள்ளை யுண்டு களிப்பவன் என்றும்;
தடியன் என்றும் மடியன் என்றும்,
தாசிகள் வீட்டுத் தானிகன் என்றும்,
பழித்துப் பேசிய பாதகா! உன்தன்
நாவை யரிந்து நாய்முன் எறிந்தா
லன்றி என்சினம் ஆறாதே, அடா;
உன்மகன் சாமி ஒழுங்கு கள்எல்லாம்
யான்அறி யேன்என் றிருந்தா யோடா?
அவன்,
பரத்தை நாடிப் பௌரணை தோறும்
கன்னிப் பதிக்குப் போகும் காரணம்
பக்தியின் மிகுதியோ? பணத்தின் மிகுதியோ?
உண்டு கொழுத்த உரத்தின் மிகுதியோ?
உண்மை யறிய உனக்கு முடியுமோ?
கள்ளுக் குடிக்கிற காரிய மெல்லாம்,
மந்தா ரம்புதூர் மதுவிளை நாடான்
கிட்டின முத்துவைக் கேட்டால் தெரியும்;
நான்சொன் னால்நீ நம்புவை யோடா?
பள்ளியில் உன்மகன் படித்துப் பெரிய

---

23. கன்னியும் காப்பும் காணாக் குமரன் - கலியாண மாகாத சிறுவன்; கன்னி காணா - கன்னி கழியாத; காப்பு- கலியாணத்தின்போது கையிலணியும் மங்கலக் காப்பு.

27. தானிகன் - ஸ்தானிகன்; இங்கே, தாசிகள் வீட்டையே இருப்பிடமாகக் கொண்டவன்.

34. பரத்தை நாடியென்பது - மோக்ஷத்தை விரும்பி யென்றும், தாசியை விரும்பியென்றும் பொருள்படும்.

35. கன்னிப்பதி - கன்னியாகுமரி.

40. மந்தாரம்புதூர் - கன்னியாகுமரிக்குப் போகும் வழியருகிலுள்ள ஓர் ஊர்.

பரீக்ஷையும் கொடுத்துப் பட்டமும் பெற்றுஒரு
மாதவ ராயராய் வரட்டும் அப்பா!
நாடும் நகரும் நடுங்கட்டும், அப்பா!
அழகு! அழகு! அதிசயம்! அதிசயம்!
பெற்ற புத்திரன் பெரும்பிழை செய்யினும்
சிறுவன் செய்த சிறுபிழை என்பாய்,
சினந்திட மாட்டாய், சிரித்து விடுவாய்
ஏசினும் பேசினும் எட்டி யடிப்பினும்
மறுத்துரை செய்யாய், பொறுத்துக் கொள்வாய்
மக்கள்மெய் தீண்டலுடற் கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கெனச் சொல்லும்
உண்மைக் குறளின் உட்பொருள் அறிந்து
நடப்பவர் உன்போல் நானிலத் தில்லை!
ஆனால்,
மருமகன் வந்து வணங்கி நின்று,
வாழ்த்த எண்ணி வாயைத் திறக்குமுன்.
வைதான் என்று பொய்தான் சொல்வாய்!
அடியேன் என்றுஅவன் அங்கை கூப்பினும்,
அடித்தான் என்றுஅநி யாயமே கூறுவாய்,

---

45. மாதவராயர்: இவர் கி. பி. 1858 முதல் 1872 வரையில் திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் திவானாக இருந்தவர். தாழ்த்தப்பட்ட மக்களுக்காகப் பல சீர்திருத்தங்களைச் செய்தவர் இவரே. திருட்டு முதலிய தீமைகளை அறவே ஒழிக்கத் தக்க ஏற்பாடு செய்தார். இலவசக் கல்வி நிலையங்கள் பல இவர் காலத்தில் ஏற்பட்டன. திருவனந்தபுரத்திலுள்ள பெரிய அரசாங்கக் காரியாலயமாகிய ஹுஸுர்க் கச்சேரி கட்டியவரும் இவரே. இவரது உருவச்சிலை இவர் கட்டிய கச்சேரி மாளிகையின் எதிர்ப்புறத்துச் சாலையிலே மாளிகையை நோக்கி நிறுவப் பெற்றுள்ளது.

53-54. திருக்குறள் 'புதல்வரைப் பெறுதல்' என்ற அதிகாரத்தில் வரும் ஐந்தாம் பாடல்,

காரண வா! உன் காரிய மெல்லாம்
அற்புதம்! அற்புதம்! அற்புதம்! அப்பா!
ஒருகண் வெண்ணெயும் ஒருகண் நீறும்
வைப்பதும் உனக்கு வழக்கம் தான், அடா!
இதற்குச் சாத்திரம் எங்கே பார்த்து
வைத்திருக் கின்றீர், மாப்பிள்ளைத் துரையே!
போட்டும்;
ஆண்டு தோறும் அறுப்புக் காலம்உன்
நாலாம் மனைவி நாடகக் காரி,
வித்துத் தண்டும் வாளை மீனும்
முருங்கைக் காயும் மொச்சைக் கொட்டையும்
வட்டி வட்டியாய் வாங்கி வாங்கிக்
கறிகள் வைத்துக் கஞ்சியும் வைத்து,
கஞ்சியை
ஆற்றி ஆற்றி அரையரை அகப்பையாய்
விட்டுக் கொண்டு, விசிறி எடுத்து,
வியர்வை மாற வீசிக் கொண்டு,
பற்பல பேச்சிலும் பக்குவ மாக
உண்மையும் பொய்யும் ஒருங்கு கலந்து
காலம் போக்கும் காரணம் இன்னதென்று
அப்ப முத்துநீ அறிவா யோடா?
கொட்டுக் குடவைப் புட்டும் தின்று,மேல்
குறுணிக் காப்பியும் குடித்தால் போதுமா!
வீட்டுக் காரியம் விசாரித்து அறிய
மதியில் லாதவன் மனிதனா? மாடா?

---

69. போட்டும் - போகட்டும்; இது நிற்க.

83. அப்பமுத்து - கொஞ்ச காலத்துக்கு முன் நாகர் கோவிலில் இருந்த பேர்போன ஒரு மூடன்.

84. கொட்டுக் குடவை - பாத்திரவகை.

சாளையும் சோறும் சண்ணும் சப்பா,
களத்துச் சுவரைக் கடந்து போவது
எத்தனை வட்டிநெல் என்றுஅறி வாயோ?
கூடப் பிறந்தவள் கும்பி கொதித்து
வந்துநின் றாலும், மாபா தகன்நீ,
ஆழாக்கு நெல்லும் அளித்திடு வாயோ!
அலர்தலை யுலகில் அறவழி நில்லா
அரசர் மகுடம் அனைத்தையும் ஒன்றாய்
அடித்து நொறுக்கி அழலிற் காய்ச்சி
மாசெலாம் அகற்றி வையகம் தொடுதன்
அடியில் இடும்செருப் பாணிகள் ஆக்கவும்,
அவர்,
கொடுங்கோல் எல்லாம் குதிரைப் பாகர்
தாங்குதற் குரிய சவுக்குகள் ஆக்கவும்,
ஈட்டி, வாள் இவை யாவையும் முறித்துப்
பண்பட நிலம்உழு படைகள் ஆக்கவும்
கொடிகள் கொற்றக் குடைகள் இவற்றைச்
சிறுசிறு துண்டாய்க் கீறிச் சிறுமியர்
பாவைக்கு அணிபா வாடைகள் ஆக்கவும்,
நாடும் நகரும் நாசம் செய்யும்

88-89. சாளைமீன் : இதில் துப்புவாளை என்றொரு வகையுண்டு, இம்மீன் முள் அதிகமுடையதாதலால், சாப்பிடும்போது, முள்ளைத் துப்பிக்கொண்டே யிருக்கவேண்டியிருக்கும். இப்படி முள்ளை நீக்கி நீக்கிச் சாப்பிடுவதற்கு அதிக நேரமாகும். பெண்டிர், இந்த மீனைக் கறிசமைத்துக் கணவருக்குப் பரிமாறி, அவர் சாப்பிட்டு எழுவதற்குமுன் களத்துச் சுவரின் மேலாக அவரறியாமல் நெல்லை அப்புறப் படுத்தி விற்றுப் பணம் சேர்த்துக்கொள்வதுண்டு. இந்தப் பழக்கமே இந்த அடிகளில் சுட்டுப்படுகிறது; சண்ணும்-நிறையச் சாப்பிடும். சப்பா-பயனற்றவன் என்பது கருத்து.

பென்னம் பெரிய பீரங்கி களை
இந்திய நாட்டில் இழுத்துக் கொணர்ந்து
செந்நெல் கோதுமை தீங்கரும்பு என்று
பன்னப் படுபல பயிர்களுக்கும் ஓங்குநம்
நிலங்களில் என்றும் நீர்வளம் பெருகக்
கங்கை யமுனை காவிரி முதலிய
வற்றிலா நதிகளில் மடைகள் ஆக்கவும்,
கங்கணம் கட்டியெம் காவலர் காவலன்
ஐந்தாம் ஜ்யார்ஜாம் அமரா பரணன்
பூதலம் மீதலம் பாதலம் நடுங்க
ஏம கால தூதரும் இளைக்கக்
கடும்போர் செய்யும்இக் காலந் தன்னில்
காரண வர்களே! காரண வர்களே!
குடும்பந் தோறும் கொடுங்கோ லரசு
நிலைத்திட முயல்வது நீதிதா னாகுமோ?
அது,
நிணிகத்து இனியொரு நிமிடம் நிற்குமோ?
ஐயோ! இவர்செய்யும் அநியா யங்களை
அறிபவர் யாரே! அறிபவர் யாரே!
கொடுங்கோ லரசர் குடிகளைப் போல்,இக்
காரண வர்களின் கைக்கீழ்த் தங்கி
இரவும் பகலும் எவ்வெப் பொழுதும்
மாறாக் கண்ணீர் வடிய விட்டிக்

---

116. ஐந்தாம் ஜ்யார்ஜ் செய்த கடும்போர்: இவர் இங்கிலாந்து தேசத்து மன்னர். இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கம் இருந்த போது, இந்தியச் சக்கரவர்த்தியாக விளங்கினார். இவர் காலத்தில்தான்முதல் உலகமகாயுத்தம் (1914-1919) நடைபெற்றது. இதுதான் இவர் செய்த கடும் போர்.

119. இக்காலம்: சென்ற முதல் மகாயுத்தம் நடந்த காமலாகிய 1914 - 1919-ம் ஆண்டு.

தீராத் துயரம் தீருநாள் எண்ணி
நைந்து நொந்து நாளைக் கழிப்பவா
எத்தனை எத்தனை என்பேன்!''
என்றெலாம் சொல்லி இனிய மொழிகளால்
வாழ்த்தி நல்ல வரங்களும் கொடுத்துத்
தெருவில் இறங்கினார்; சிறிது தூரம்
சென்று, பின்னும் சீறிச் சினந்து
வந்தார்: வந்த வரவில், மண்டை
படீரென வாசற் படியில் மோத,
முன்னிலும் கோபம் மூண்டு, "மூடா!
வஞ்சகா! உன்குட வண்டியைக் கலக்கிப்
போடு கிறேன்பார்......
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ...
படபட என்று பற்பல மொழிகளைப்
பொரித்துக் கொட்டிப் போனார், அம்மா!
கணவரோ,
வைய வைய வைரக் கல்லும்
திட்டத் திட்டத் திண்டுக் கல்லும்
ஆகி யிருந்தனர்... ... ...

---

141. குடவண்டி: தொந்தி வயிறு.

142 - 4. இவ்விடத்தில் ஏடு சிதிலமாகப் போய் விட்டது.

148. வைய, வைய - திட்டத் திட்ட; மிகவும் மௌனம் கொண்டனர்.

## 9. கோடேறிக் குடிமுடித்த படலம்

ஐயோ! ஐயோ! அடங்கா வீர
பத்திரப் பிள்ளை, (அப்பாவி பாதகன், என்
குடியைக் கெடுத்த கொடியசண் டாளன்,
அரக்கன், ஏழரை ஆண்டைச் சனியன்)
விரைவில் ஓடி வீட்டில் சென்று,
மனைவியை அழைத்து மண்டையைக் காட்டி, உன்
அண்ணன் அடித்த அடிகளைப் பாரடி!
இன்றைக்கு,
உயிர்போ காமல் இருந்ததுஉன் தாலிப்
பாக்கியம் தானடி, பகவான் செயலடி!
அவன், எண்ணிப் பாராது ஏசின ஏச்சில்
கடுகள வேனும்உன் காதில் விழுந்தால்நீ
நஞ்சைத் தின்பாய், நான்று சாவாய்,
நாக்கைப் பிடுங்கி நடுங்கி இறப்பாய்,
ஆற்றில் குளத்தில் அலறி விழுவாய்,
சங்கிலித் துறைபோய்ச் சாடி யொழிவாய்;
இதற்கோர் ஐயம் இல்லையே!

---

16. சங்கிலித் துறை - கன்னியாகுமரிக் கடலில் தீர்த்த மாடும் இடத்தையடுத்துள்ள ஆழமான ஓரிடம். தீர்த்தமாடுவோர் அலைகளால் அடித்துச் செல்லப்படாதவாறு இரும்புச் சங்கிலியால் அங்கே வேலி போடப்பட்டிருக்கும்.

என்னைப்
பறைப்பயல் பள்ளப் பயலினும் கேடாய்
நினைத்துப் பேசின நீசன் அவனை
வாயில் மண்ணை வாரி யடித்து
வீட்டை விட்டு வெளியி லிறக்கின
அன்றைக்கு அல்லவோ ஆண்பிள்ளை யாவேன்?
என்று பற்பல இன்னும் சொல்லிக்
கோபா வேசம் கொண்டவ னானான்.
கூட இருந்த குசும்பன் சாமி
போதா தென்று புகையும் போட்டான்.
வீணாய்க் கதையை விரிப்பதேன்? அம்மா!
அப்பனும் மகனும் அண்டை வீட்டுக்
குசும்பன் சாமியும் குண்டுணிச் சுப்புவும்
கோட்டு மாடன் பிள்ளையும் கூடி
இரவும் முழுதும் இருந்து, யோசனை
பலவும் செய்து, பலபல வென்று
விடியு முன்னம் விரைவா யெழுந்து,
பானையில் கிடந்த பழவோ லைகளும்
முறிப்பெட்டி யிலுள்ள முன்னோ லைகளும்
கைச்சீட் டுகளும் கடச்சிட் டுகளும்
கைச்சாத் துகளும் பொய்ச்சாத் துகளும்,

---

26. குசும்பன் சாமி - ஒருவரைப்பற்றி மற்றொருவனிடம் சதா கோள் சொல்லிப் பகை மூட்டுவதையே தொழிலாகக்கொண்ட சாமி என்னுமொருவன்.

36. முறிப்பெட்டி - ஓலைப் பிரமாணங்களைக் காப்பாற்றி வைப்பதற்குரிய பெட்டி. முறி - ஓலைப் பிரமாணம்.

37. கடச்சீட்டு - கடன்சீட்டு.

38. கைச்சாத்து - ரசீது.

பத்திரச் சுருளும் பகர்ப்புச் சுருளும்
எல்லாம் சுமடாய்க் கட்டி, இரண்டொரு
முண்டைப் போட்டு மூடிப் பொதிந்து
தோளில் வைத்துச் சுமந்து கொண்டு,
நாகையம் பதியை நாடிச் சென்றனர்.
அங்கு,
நீதிக் கெல்லாம் நிலைய மாகியும்
உண்மைக் கெல்லாம் உறைவிட மாகியும்
கருணைக் கெல்லாம் களஞ்சிய மாகியும்
வாழும் நியாய வாதிகள் தங்கும்
வீதியை முற்ற விலகிச் சென்று, வீண்
விவகார ங்கள் விளைநில மாகியும்
பொய்கள் அடைக்கலம் புகுமிட மாகியும்
குதர்க்கம் குடிகொளும் குகையிட மாகியும்
திருஅவ தாரம் செய்தன் றிருந்தஓர்
அண்டப் புரட்டன் வக்கீல் ஆபீஸில்;
ஆனைப் பொய்யன் குமஸ்தனை யறிந்து,
காரியம் சொன்னார், கதைகளும் சொன்னார்;
'காரண வனைப்பல காரணத் தாலே
மாற்றும் படிக்கு வந்தோம்' என்றார்;
புற்றை விட்டுப் புறம்போ காமல்
பட்டினி கிடக்கும் பாம்பின் வாயில்
தேரை குதித்துச் சென்று விழுவது
நாகம் முன்செய்த நல்வினைப் பயனோ?
தேரை முன்செய்த தீவினைப் பயனோ?

---

39. பகர்ப்புச் சுருள் - நகல்: ஒன்றைப் பார்த்துப் பெயர்த்தெழுதி வைத்தது.

43. நாகை - நாகர்கோவில்.

ஏதெனச் சொல்ல எவரால் ஆகும்,
செல்லும் செலவு செய்திட, ரூபாய்
நூற்றைம் பதுக்கோர் நோட்டு, வக்கீல்
மைத்துனன் முத்துவாத்தியார் பேருக்கு
எழுதி முடித்தார்; எடுத்து வந்த
ஆதா ரங்கள் அனைத்தும் கொடுத்தார்;
இவரிவர் சாக்ஷிகள் என்றும் சொன்னார்;
வெள்ளை மடத்துக் கள்ள பிரானெனும்
மூத்த பிள்ளையே முதலாம் சாக்ஷி;
மாத்தால் கணக்கு மகரா சன்மகன்
பிச்சைக் காரன் பின்னொரு சாக்ஷி;
இருக ணில்லா இருளப் பன்மகன்
முத்தொளி மறவன் மூன்றாம் சாக்ஷி;
ஐயம் பிள்ளை அண்ணாவி புதல்வன்
நல்ல பிள்ளை நாலாம் சாக்ஷி;
பொய்சொலா மெய்யன் புத்திரன் மாறி
யாடும் பெருமாள் ஐந்தாம் சாக்ஷி,

---

66. நோட்டு - பிராமிசரி நோட்டு என்னும் கடன் பத்திரம்.

71. வெள்ளை மடம்- நாகர்கோவிலையடுத்த ஒரூர்; கள்ள பிரான் - அங்குள்ளார் ஒருவரின் பெயர்.

62. மூத்த பிள்ளை-நாஞ்சில்நாட்டு வேளாளரில் தகுதி யுடையவருக்குத் திருவிதாங்கூர் மன்னரால் முன்பு அளிக்கப் பட்டு வந்த ஒரு பட்டம்.

73. மாத்தால் - நாகர்கோவிலுக்கு ஆறு மைல் வடக்கி லுள்ள ஒரூர். கணக்கு - மூத்தபிள்ளை ஸ்தானம் உடைய வர்கள் பெயரோடு 'கணக்கு' என்று இணைத்தெழுதுவது வழக்கம்.

77. அண்ணாவி - உபாத்தியாயர்.

79. - 80. பொய் சொலா மெய்யன், மாறியாடும்பெரு மாள் இவை பெயர்கள்.

நம்பர் பதித்த நாலாம் மாதம்
ஒருநாள் காலை, உறக்கப் பாயில்
எழுந்துஎன் கணவர் இருக்கும் பொழுது;
கறுப்பன் கட்டையன் கப்படா மீசைக்
காரன் ஒருவன், காலனைப் போல,
கோர்ட்டு சம்மனைக் கொண்டு வந்தான்.
(நச்சுவா யண்ணன் நாச காலன்
வீர பத்திரன், வெட்டையாய்ப் போவான்,
எண்ணினது போல எல்லாம் ஆச்சுதே!
நினைத்தது போல நேரம் விடிந்ததே!
இந்நாள் இங்கு யான்படும் பாடெலாம்,
நாளை
அவரும் மக்களும் அனுபவிப் பார்கள்;
யாதும் தடையிலை, யாதும் தடையிலை;
பத்தினி என்சொல் பழுதா காது,
உத்தமி என்சொல் ஊரையும் சுடுமே;
கேட்கும், கேட்கும், தெய்வம் கேட்கும்!)
சேவகன் வந்த காரியம் தெரிந்தோ,
இயல்பாய்த் தானோ, (யாதோ அறியேன்)
மேல்வீட்டிருந்து வெள்ளையம் பிள்ளை
அண்ணனும் அப்பொழுது அங்கு வந்து,
'யார் இவன்' என்றனர், 'இன்னார்' என்றோம்;
சம்மனைப் படித்துச் சங்கதி யறிந்துஎன்
புருஷனை நோக்கி, "போன தெல்லாம்

---

**84 - 5.** கறுப்பனும் கட்டையனும் மீசைக்காரனுமான ஒருவன்.

**81 - 8.** நச்சுவாயண்ணனும் நாசகாலனும் வெட்டையாய்ப் போவானுமான வீரபத்திரன்.

போகட்டும் ஐயா! பொய்கைப் பற்றில்
ஆறு தடியும், அணஞ்சி விளையும்,
துலுக்கன் தோப்பும், தொட்டிச்சி மேடும்;
மேலத் தெருவில் மேடை வீடும்;
ஈரணை ஏரும், ஏழு பசுவும்,
யாதொரு கடனும் இல்லா மல், நீர்
இருக்கு மட்டும் யாப்பிய மாகவும்,
அப்பால் அவற்றைஉம் அருமை மக்கள்
ஒன்றுவி டாதுஉகந் துடைமை யாகவும்,
எடுத்துக் கொள்ளஓர் ஓலை யெழுதி
உம்மை மக்களோடு ஒதுக்கி விடுவரேல்,
வாங்கிக் கொண்டு வழக்கில் லாமல்
சும்மா இருப்பது மெத்தச் சுகமாம்.
இப்படி ராஜி எழுதிக் கொடுக்க
உமக்குச் சம்மத முண்டோ? சொல்லும்.
வியாச்சிய மென்னும் சுழியில் விழுந்து
கறகற வென்று கறங்கி மயங்கி,
கைப்பொருள் இழந்து கடனும் வாங்கி
வீணாய்த் துன்பம் விளைத்திட வேண்டாம்,
அல்லலை விருந்துக்கு அழைத்திட வேண்டாம்!
தொல்லைக்குத் தூது சொல்லிட வேண்டாம்;
ஐயோ! கோர்ட்டுக்கு ஆரே போவார்!
ஐயோ! கோர்ட்டுக்கு ஆரே போவார்!
பண்டொரு நீதி பதி, தம் கோர்ட்டு

---

105-7. பொய்கைப்பற்று, அணஞ்சிவிளை, துலுக்கன் தோப்பு, தொட்டிச்சிமேடு : நிலப்பெயர்கள்.

111. யாப்பியம் - நாஞ்சில் நாட்டு மருமக்கள் தாயக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர், குடும்பத்திலிருந்து விலகும் போது, அக்குடும்பத்தில் அவருக்குள்ள பாத்தியதைக்கு ஈடாகக் கொடுத்து ஒதுக்கும் சொத்து.

வாயிலின் வந்த மனித ரெல்லாம்,
உடைந்த ஓட்டை ஒருகையி லேந்தி
வழக்கு இழந்தவன் வாடி நிற்பதையும்,
தாட்பொதி யென்று தலையிற் சுமந்து
வென்றவன் உடலம் மெலிந்து நிற்பதையும்
கண்களால் கண்டு, கண்டு நாளும்
நல்லறிவு எய்திட நடைநடை தோறும்
இருபுறச் சுவரிலும் இரண்டு உருவங்கள்
செய்து வைத்த கதைதெரி யாதோ?
இழந்தவர் வென்றவர் இருவர் நீதியும்
இவைகளன்றி வேறு எவையும் உண்டோ?

---

**128-137.** முன்பு, அறிவுள்ள நீதிபதி யொருவர் நியாயத் தலத்து வாயிலின் இருபக்கங்களிலும் யாவரும் பார்க்கும்படி இரண்டு சித்திரங்கள் எழுதி வைக்கச் செய்திருந்தார். முதலாவது சித்திரம், எலும்புந் தோலுமாகி, தரித்திர நிலையடைந்த ஒரு மனிதன் உடைந்த ஓடொன்றைக் கையிலேந்தி நிற்பது; இது, கோர்ட்டு வழக்கில் ஈடுபட்டவர் இரு சாராருள், வழக்குத் தோற்றவர் தம் கைப்பொருள் இழந்து, இரப்பதற்கு நல்ல சட்டிகூடக் கிடைக்காமல், உடைந்த ஓட்டைக் கையில் வைத்திருக்கும் காட்சி. இரண்டாவது சித்திரம், மற்றொரு மனிதன் காகிதப் பொதியொன்றைத் தலையில் சுமந்து நிற்பது. இது, வழக்கில் வென்றவர் தமது பொருளையெல்லாம் வழக்காடுவதிலே செலவுசெய்து வென்ற பிறகு, பணமிழந்து வழக்குச் சம்பந்தமான தஸ்தாவேஜுகள் மாத்திரமே மீதியாகி, அவற்றைத் தலையிலே சுமந்து கொண்டு திரியும் காட்சி. இவ்வுருவங்களைப் பார்த்த பிறகேனும், வழக்கில் வென்றவர் நிலைமையும் தோற்றவர் நிலைமையும் முடிவில் தரித்திர நிலைமையே என்பதை அறிந்து, கோர்ட்டுக்குப் போய் வீணில் பொருளைப் பாழாக்காதிருக்க வேண்டும் என்ற உண்மையை மக்கள் உணர்ந்து ஒழுகும் பொருட்டு, ஒரு நீதிபதி அவ்வுருவங்களை எழுதி வைக்கச் செய்தார் என்றொரு கதை உண்டு.

**132.** தாட்பொதி - காகிதக் கட்டு.

புத்தியில் லாஇரு பூனைகள் பண்டு
வானரத் திடம்போய் வழக்குச் சொல்லி
உள்ளது இழந்துவே றுணவும் இன்றி
வெறுங்கை யாகி வெட்கி மீண்டதாய்
நாம்,
பள்ளியில் பாடம் படிக்க வில்லையோ?
கோர்ட்டில் சென்று குதித்திட வேண்டாம்.
அரையடிச் சுவருக் காகஜக் கோர்ட்டு
வரையிலும் ஏறி, வழக்குப் பேசி,
அந்தி புரத்து மந்திரம் பிள்ளை
அடியோடு கெட்டது அறியமாட் டீரோ?
வடக்கு வீட்டு மச்சம் பியும்அவர்
மருமக் களுமாய் வருஷம்எட் டாக
மாறி மாறி வாதும் செய்து,
யாவையும் போக்கி, இரவா வண்ணம்
இரந்து திரிவதை இவ்வூ ரில்நாம்
கண்ணால் இன்று காண வில்லையோ?
வேலுப் பிள்ளை வீட்டு நம்பரில்,
ஐந்தாம் சாக்ஷி ஆண்டி அவனை
அழஅழப் படுத்தி, அறுபது ரூபாய்

---

140-145. இரு பூனைகள் வானரத்திடம் சென்று வழக்கு பேசிய கதை; இது பஞ்சதந்திரத்தில் உள்ளது.

149. அந்திபுரம் - நாஞ்சில் நாட்டிலுள்ள ஓரூர்.

151. மச்சம்பி - அத்தான்; அக்காள் கணவன்.

157. வேலுப்பிள்ளை வீட்டு நம்பர் - வேலுப்பிள்ளை என்பவரின் குடும்பத்தில் ஏற்பட்ட வழக்கு.

158. ஆண்டி: ஒருவர் பெயர்.

159. அழ அழப்படுத்தி - மிகவும் கஷ்டப்படுத்தி.

வாங்கிக் கொண்டு, மேல் வாயிதாத் தோறும்,

'வீட்டுக் காரியம் வெட்ட வெளிச்சம்,
முட்டப் பஞ்சம், மூதேவி வாசம்
பானையி லேபத் தரிசி இல்லை,
உப்போ புளியோ ஒன் றுமில்லை;
உச்சிக்கு எண்ணெய் ஒருதுளி யில்லை,

தொட்டில் கட்டத் துணியு மில்லை,
காந்தி மதிக்குக் கண்டாங்கி இல்லை,
எனக்கும் வேட்டி யாதொன் றுமில்லை;
இப்படி யிருக்க, எப்படி உமக்காய்
கோர்ட்டில் மொழி நான் கொடுக்க வருவேன்?'

என்று சொல்லி, எத்தனை பணத்தைத்
தட்டிப் பறித்தான் சண்டாளன், அப்பா!
முளைய நல்லூர் முதல்பிடிப் பிள்ளை
அண்ணனும் இப்படி யாகக் காரணம்,

---

167. காந்திமதி - ஆண்டியின் மனைவி.

173. முளைய நல்லூர்: இப்பெயருடைய ஊர் தற்பொழுது நாஞ்சில் நாட்டில் அழிந்துவிட்டது. இவ்வூரிலுள்ள ஒருவன் நாஞ்சில் மக்களுக்குப் பெருந்துன்பம் இழைத்து வந்தான் என்று, நாஞ்சில் நாட்டில் வழங்கிவரும் பழம் பாடல் ஒன்று தெரிவிக்கிறது. அப்பாடல் வருமாறு:

"தாழக் குடியில் வைரவனும்
தமிழ்த்தே ரூரில் சந்திரனும்
கூழம் பெருத்த முளையநல் லூர்க்
குறும்பன் அணஞ்ச பெருமாளும்
நாளை இவர்கள் தலைதெறித்தால்
நன்றாய் வாழும் நாஞ்சில்நாடு."

முதல் பிடிப் பிள்ளை - பொக்கிஷதாரன்; ஊரின் பொது நிதியைக் காப்பவன்.

விளாத்திக் கோண விவகார மல்லவோர்
எத்தனை வகையை இழந்தார், அப்பா!
மூக்கறை யன்விளை மூலையில் நிற்கும்
பலாமர மொன்றுமே பத்துக் குடும்பம்
தாங்கி, மீதியும் தருமே, அப்பா!
அந்த,
மதினி கழுத்தில் மங்கிலியம் தவிர
எல்லா நகையும் இறக்கிவிட் டாளே!
ஒவ்வொரு காதிலும் உழக்குழக் குப்பொன்
இட்டிருந் தாளே! எல்லாம் போச்சே!
ஆளும் வேற்றாள் ஆகி விட்டதே!
கருந்தாளி உலக்கை கையில் எடுத்துஅவள்
கோவில் நெல்லைக் குத்துவாள் என்று
யாவ ராயினும் எண்ணினது உண்டா?
என்ன செய்வாள், ஏழை! பாவம்!
நட்டியும் குட்டியும் நாழியும் உழக்குமாய்
ஏழு மக்களையும் எப்படி வளர்ப்பாள்?
கோர்ட்டு! வழக்குக் கொஞ்சமா செய்யும்?
இதுவும் செய்யும், மேலே எதுவும் செய்யும்;
கட்டுக் கட்டாய்க் காய்கறி யனுப்பவும்,

---

175. விளாத்திக் கோணம்: ஒரு கோணத்தின் பெயர்; கோணம் - ஒருவருக்கு உரிமையான பல நிலங்கள் அடுத் தடுத்து ஒரு சேகரமாகக் கிடக்கும் பகுதி.

176. வகை - வஸ்து, சொத்து.

177. மூக்கறையன் விளை - ஒரு புன்செய் நிலம்.

186. கருந்தாளி உலக்கை: கருந்தாளி மரத்தால் செய்தது.

190. அதிக காலம் இடையீடில்லாதபடி அடுத்தடுத்துப் பல குழந்தைகள் பிறந்திருந்தால், அவற்றை 'நட்டியும் குட்டியும் நாழியும் உழக்கும்' என்று நாஞ்சில் நாட்டில் சொல்வதுண்டு.

வல்லம் வல்லமாய் மாம்பழம் அனுப்பவும்,
பானை பானையாய்ப் பால்நெய் யனுப்பவும்,
மந்தை மந்தையாய் மாடுகள் அனுப்பவும்,
வண்டி வண்டியாய் வைக்கோல் அனுப்பவும்,
யாரால் முடியும்! யாரால் முடியும்,
எந்தக் குடும்பம் ஈடு நிற்கும்?
ஐயா,
வழக்கும் இழந்து, வகையும் இழந்து,
யாவும் இழந்து ஏங்கி யிருக்கும்
கைலாசம் பிள்ளைக் கரையாளன் வீட்டை
வக்கீல் பீஸு பாக்கி வகையில்
எழுபது ரூபாய்க்கு ஏலம் கூறிக்
கொட்டிக் கொட்டிக் கொண்டு போனதும்
நேற்றுத் தானே, நினைவு மில்லையோ?
இந்த மாசம் எட்டாங்தேதி
மேலத் தெருவில்...வீட்டில்
ஜப்திக்கு வந்த தலைவன், ஐயோ!
எள்ளள வேனும் இரக்கமில் லாமல்
அந்தக்
கிழவனைத் தூக்கிக் கீழே போட்டுக்
கட்டிலை வெளியில் கடத்தச் சொன்னதும்,

---

195. வல்லம் - தென்னங்கீற்றினால் செய்யும் ஒரு வகைக் கூடை.

204. கரையாளன் : இது ஓர் உத்தியோகப் பெயர். கரையிலுள்ள வரிப்பணம் வாங்குபவர். தற்பொழுது நாஞ்சில் நாட்டின் பகுதி, ஊர் என்று பிரிந்திருப்பது போல, முன்பு, கரை, தேசம் என்றிருந்தது. கரையிலுள்ள பணப் பிரிவு செய்யும் உத்தியோகஸ்தர் கரையாளர் என்று அழைக்கப்பட்டார்.

210. ஏட்டில் பொடிவு.

தண்ணீர் குடிக்கும் சமயம் பார்த்துப்
பிள்ளைக் கெண்டியைப் பிடுங்கச் செய்ததும்,
சருவப் பானை சட்டுவம் அகப்பை
குட்டுவம் செம்பு குழியில் முதலாய்
உப்போடு சிரட்டை ஒன்றுமில் லாமல்
எல்லாம் வண்டியில் ஏற்றிச் சென்றதும்,
நாம்
காணாமற் கண்டதோ? கனவோ? ஐயா!
நாமெலாம் சேர்ந்து நடத்தின கட்சிக்
கொடையில், மாடன் கொண்டாடி நம்பி
சந்தனம் பூசிச் சல்லடம் கட்டிப்
பூவை யெடுக்கப் போன பொழுது,
வாரண்டுக் காரன் வந்ததை யறிந்து,
குட்டிச் சுவரெலாம் குதித்துச் சாடி,
வாய்க்கால் வழியாய் வடக்கே யோடி,
ஒருவரும் காணாது ஓச்சன் குளத்து

---

219. குட்டுவம் - தண்ணீர் விட்டு வைத்திருப்பதற்காக உபயோகிக்கும் பரந்த பெரிய பாத்திரம்; கொப்பரை என்று சொல்லுவதுமுண்டு. குழியல் - சாப்பிட உபயோகிக்கும் பாத்திரம்.

220. உப்போடு உப்புப் போட்டு வைக்க உபயோகிக்கும் அற்பப் பாத்திரம்; மரத்தாலானது. சிரட்டை - கொட்டாங்கச்சி. மிக்க விலையுயர்ந்த பாத்திரம். முதல் விலையே அல்லாத அற்பச் சிரட்டை வரையிலுள்ள எல்லாப் பாத்திரங்களையும் என்பதைக் காட்டுகிறது.

225. மாடன் கொண்டாடி நம்பி - மாடன் என்ற தெய்வத்தை ஆராதனை செய்து, ஆவேசம் வந்து ஆடுபவன்; நம்பி என்ற பெயருடையவன்.

231. ஓச்சன் - உவச்சன்; உவச்சன் குளம் என்பது ஒரு குளம். அழகியபாண்டியபுரம் முதலிய பல ஊர்களில் இப்பெயருடைய குளங்கள் உள்ளன.

மடைக்குட் சென்று மறைந்து கொண்டதும்,
'சாமி சுடலைச் சாம்பலி லாடி
விளையா டுதற்கு வேகமாய்ப் போகிறார்'
என்று நினைத்து அங்கிருந்தவ ரெல்லாம்
எழுந்து போனதும், எங்கும் தேடிக்
காணா தானதும், கடைசியில் உண்மை
தெரிய வந்ததும், செலவோடு செலவுஎன்று
ஏழு ரூபாய் எண்ணிக் கொடுத்து
வாரண்டை அன்று மடக்கி விட்டதும்
நடந்த காரியமோ? நாடகந் தானோ?
வியாச்சியம் வேண்டாம், வியாச்சியம் வேண்டாம்,
தேடின முதலைத் தெருவில் வாரி
இறைக்க வேண்டாம்; இறைக்க வேண்டாம்.
அல்லும் பகலும் அலுப்பில் லாமல்
ஆஆ என்றுஅலை ஆமீன் வாயில்
அகப்பட் டார்வெளி யாவது முண்டோ?
சுறா மீனையுமே தூக்கி விழுங்கும்
பொல்லா மீன்இது போலொரு மீனைக்
கடலிலும் கூடக் கண்டவ ரில்லை.
எவரினும் பெரியவன் யானே ஆவேன்;
எப்பெரு வேலையும் எளிதில் முடிப்பேன்!
இம்மிரு கத்தையும் எடுத்தொரு நொடியில்
வானெலாம் சுற்றி வருவதற் குள்ள
ஆற்றலு முடையேன்; ஆனால், அத்திறம்
அனைத்தையும் வெளிப்படை யாகக் காட்ட

---

240. மடக்கிவிட்டது - ஆளைப் பிடிக்காமல் திரும்பிப் போகச் செய்தது.

246. ஆஆ என்று அலைகிற ஆமீன் - அமீனா.

அற்பமும் ஆசை எனக்கிலை; அன்றியும்,
உருவமோ நீளமோ உயரமோ கண்டே
மூட உலகம் மோசம் போகும்;
ஆதலால் ஒருவரும் அறியா திருந்துஇந்
நாலுகை யானை நடத்து கின்றேன்,
என்றுதன் முதுகி லிருக்கும் ஈயொன்று
எண்ணா துடம்பம் எடுத்துரைப் பதுபோல்,
'இரவும் பகலும் இடை விடாமல்
பற்பல வருஷம் படித்து பி. எல்.,
எம். எல். பட்டம் எல்லாம் பெற்று
வந்திடும் பெரிய வக்கீல் மாரும்,
யாங்க ளில்லையேல் என்செய் வார்?' எனப்
புத்தி யிலாது புலம்பித் திரியும்
குமாஸ்தா வெனும்ஈக் கூட்டம் உம்மைக்
குத்தி ரத்தம் குடித்திடும்; ஐயா!
கோர்ட்டில் சென்று குதித்திட வேண்டாம்!
குதித்துக் குடியைக் கெடுத்திட வேண்டாம்!
'இன்ன படியென்று எழுதி விட்ட
சிவனே வரினும் சிறிதும் அஞ்சேன்,
விதியினுக்கு ஆயிரம் விக்கினம் சொல்வேன்;
வருகிற வழியாய் வந்துஎனைக் கண்டால்
சிக்கெலாம் போக்கித் தீர்ப்பையும் நடத்தித்
தருவேன்' என்று சற்றும்வாய் கூசாது
உரைக்கும் அந்த உத்தம புருஷன்
நிறையா வயிற்றை நிறைத்திடக் கடலைத்

---

261. நாலுகை—வக்கீல் கோர்ட்டில் அணியும் கறுப்புக் 'கவுன்' நாலுகையுடைய சட்டை என்று ஏளனமாகச் சொல்வது வழக்கம். நாலுகை யானை என்பது வக்கீல். வக்கீலாகிய யானையைத் தான் நடத்திச் செல்வதாகக் குமஸ்தா கூறிக்கொள்கிறான்.

திறந்துவிட் டாலும் திகையுமோ? ஐயா!
வீட்டை விட்டு வெளிவரா உமக்குக்
கோர்ட்டுக் காரியம் கொஞ்சமும் தெரியுமோ?
பாரப் படிகளும் பட்டிகைப் படிகளும்
சாக்ஷிப் படிகளும் சமன்ஸுப் படிகளும்
கணக்கி லடங்காக் கமிஷன் படிகளும்
ஜப்திப் படிகளும் லேலப் படிகளும்
வாரண்டுப் படிகளும் வாசற் படிகளும்
ஏணிப் படிகளும், இப்படி அப்படி
எல்லாப் படிகளும் ஏறி இறங்கி,
வாணாள் கொடுத்து வாண தீர்த்தம்
ஆட ஆளும் நீரோ? ஐயா!
கோர்ட்டு பீஸு குமாஸ்தா பீஸு
கூடிக் காப்பி குடிக்கப் பீஸு
வெற்றிலை வாங்கிட வேறொரு பீஸு
வக்கீல் பீஸு மகமைப் பீஸு
வக்கா லத்து வகைக்கொரு பீஸு
எழுதப் பீஸு சொல்லப் பீஸு
எழுதிய தாளை எடுக்கப் பீஸு
நிற்கப் பீஸு இருக்கப் பீஸு
நீட்டின கையை மடக்கப் பீஸு

---

285. பாரப் படி : பாரம் எழுதுவதற்குரிய கூலி.
288. லேலம் - ஏலம்.

292. 'வாணாளக் கொடுத்து வாண தீர்த்தம் ஆடுவது' என்பது ஒரு நாஞ்சில் நாட்டுப் பழமொழி; வாண தீர்த்தம் என்பது பாபநாசம் அருவியிலுள்ள ஒரு தீர்த்தக் கட்டம். இதில் தீர்த்தமாடி வருவது மிகவும் சிரமமான காரியம். அதிகக் கஷ்டப்பட்டு ஒரு காரியத்தை நிறைவேற்றுவது இப் பழமொழியின் கருத்து.

பாரப் பீஸு கீரப் பீஸு
பார இழவு பயிற்றுப் பீஸு
கண்டு பீஸு காணாப் பீஸு
முண்டுத் துணிக்கொரு முழுமல் பீஸு
அந்தப் பீஸு இந்தப் பீஸு
ஆனைப் பீஸு பூனைப்பீஸு
ஏறப் பீஸு இறங்கப் பீஸு
இப்படி யாக என்றென் றைக்கும்
பீஸு பீஸாகப் பிச்சுப் பிடுங்கும்
கோர்ட்டில் சென்று குதித்திட வேண்டாம்,
குதித்துக் குடியை முடித்திட வேண்டம்;
மூவுல கேத்து மூவரும் நாணப்
பொதுரிக் கார்ட்டுப் புரையில் தனியாய்
ஓர், மூலையில் இருந்து முத்தொழில் இயற்றும்
தெய்வத் தின்இரு சேவடி நிதமும்
கண்டு தொழுது காணிக்கை யிட்டு
வணங்கா தவர்க்கு வருந்தோ ஷங்கள்
இத்தனை யென்றிட யாரால் முடியும்?

---

303. பாரப்பீஸு: கோர்ட்டு 'பாரங்'களைப் பூர்த்தி செய்து எழுதுவதற்குரிய கூலி.

311, பீஸுபீஸாய்: பீஸ் (fees) என்னும் கட்டணம் கட்டணமாக என்றும், துண்டு (Piece) துண்டாக என்றும் பொருள்படும். பிச்சு - பிய்த்து.

314. மூவர்—பிரம, விஷ்ணு, ருத்திரர்.

315. பொதுரிக்கார்ட்டுப் புரை: ரக்கார்டுகள் வைக்கப் பட்டிருக்கும் இடம்; ஆவணக் களரி (Record Office)

316-7. முத்தொழில்: இல்லாததை உண்டுபண்ணுதல். உண்டுபண்ணியதைப் பரிபாலித்தல், உள்ளதை அழித்தல் என்பன. தெய்வம்—இங்கே குமாஸ்தா.

இதற்கெலாம் முதலுக்கு எங்கே போவீர்?
வஞ்சியை முறித்து வாரப் போவீரா?
வாதி பாகத்து வக்கீல் உம்மைக்
கூட்டில் ஏற்றிக் குறுக்கு மறுக்காய்க்
கிராஸு கேட்டுக் கிடுக்கி விடுவான்;
சந்தேக மில்லை, சந்தேக மில்லை;
நீர்,
அண்டப் புரட்டனை அறிய மாட்டீர்;
புத்தியில் பெரியவர், பொல்லாத வம்பர்;
ஆளும் தரமும் அறிந்திட வல்லவர்;
சீரும் திறமும் தெரிந்திடச் சமர்த்தர்;
ஆடிக் கறப்பதை ஆடிக் கறப்பவர்;
பாடிக் கறப்பதைப் பாடிக் கறப்பார்;
தயவாய்ச் சொல்லுவார், தக்கில் கேட்பார்,
இரைந்து சொல்வார், எச்சில் எழுப்புவார்;
பார்பார் என்பார், பல்லைக் கடிப்பார்;
போருக்கு நிற்பார், புலிபோல் பாய்வார்;
அங்கும் இங்கும் அசையாதே என்பார்;
குனியாதே என்பார், கோட்டைப்பார் என்பார்,
கோட்டையும் கூடக் கூட்டாக் காமல்
கேள்விகள் பலவும் கேட்க வருவார்.

---

322. வஞ்சி - கோவிலில் காணிக்கை செலுத்தும் உண்டிப் பெட்டி. வஞ்சியை முறித்தல்: திருட்டுத் தொழிலில் வல்லவனை, 'வஞ்சியை முறித்த கணவன்' என்று சொல்வது நாஞ்சினாட்டு வழக்கம்.

325. கிராஸு—குறுக்கு விசாரணை.

334. தக்கில்—தாழ்ந்த குரலில்.

339. கோட்டை—கோர்ட்டை.

'ஓடும் குதிரைக்கு உச்சியில் கொம்புகள்
ஒன்றா? இரண்டா? உடன்சொலும்' என்பார்;
நாம்,
'குதிரைக்கு ஏது கொம்புகள்?' என்றால்
அது,
கோர்ட்டு அலட்சியக் குற்றம் என்பார்;
'கேள்வியை நன்றாய்க் கேட்டுச் சொல்லும்;
இரண்டா? ஒன்றா? என்பதுஎன் கேள்வி;
உண்டா? இல்லையா? என்றுநான் உம்மிடம்
கேட்டே னாஓய்? காதுகேட் காதோ?'
என்றெலாம் சொல்லி ஏமாற்றி விடுவார்;
குண்டில் விழுந்த குள்ள நரியைப்
படுத்தும் பாடெலாம் உம்மைப் படுத்துவார்.
இவர்,
ஈரங் கிகளை எடுத்துச் சொன்னால்
பீரங் கிகளும் பின்னிட் டோடும்;
பொல்லா தவர்அவர், பொல்லா தவர்அவர்.
இந்த வக்கீலுக்கு ஏழரை நாட்டனும்
இணையா வாரோ? இணையா வாரோ?
அறிந்து பிழையும், அறிந்து பிழையும்,
சொந்த வீட்டில் துரும்பையும் தூக்கி
எறியச் சற்றும் இயலாது என்பவர்,

---

353. குண்டில்—பள்ளத்தில்.

356. ஈரங்கி: (Hearing) வழக்குக் கேட்கை.

359. ஏழரை நாட்டன்: ஏர்ட்லி நார்ட்டன் (Eardley Norton) என்ற பிரசித்தி பெற்ற ஆங்கிலேய வக்கீல்; பாமர மக்கள் இப்பெயரை உச்சரிக்கும்போது, ஏழரை நாட்டன் என்று மருவி, ஏழரை நாட்டுச் சனியன் என்றும் பொருள் படும்.

வக்கீல் வீட்டில் வரிக்கல் பிடுங்கப்
போவதும் எத்தனை புத்திகேடு ஐயா;
தங்கை மக்கள் தரித்திரம் அடைந்து
வயிற்றுக்கு இன்றி வாடி யலைய
வருக்கை மாம்பழமும் வாழைப் பழமும்
பெட்டிப் பாலும் பிஸ்கோத் துகளும்
ஊரார் மக்கள் உண்டு களித்திட
வாங்கிச் செல்வது மதியுளார் செயலோ?
மேடும் காடும் வெட்டித் திருத்திப்
பாறையும் உடைத்துப் படுநில மாக்கிப்
பருவம் அறிந்து பண்பட உழுது
மண்ணலம் உணர்ந்து வளமிகப் பெய்து
வாசிறை மீண்டான் வளரச் செய்து,
சம்பாப் பயிரைத் தழைக்கச் செய்து,
காலா காலத்தில் களைகள் எடுத்து,
வேலியைக் கட்டி விலங்கினம் விலக்கிப்
பறைகளைக் கொட்டிப் பறவையை ஓட்டி,
நீரும் பாய்ச்சி, நிதமும் இராப்பகல்
உறக்க மின்றி உழைப்பத னாலே,
விளையச் செய்த மேனிநெல் எல்லாம்,
வக்கீல் வீட்டு வாயிலிற் கொண்டுபோய்
விரித்துக் காய்ச்சி வீசித் தூற்றி
அளந்து வாரி அறைக்குட் போட்டு
வெறுங்கை யோடு வீடுபோய்ச் சேரும்
நம்மவர் போல்இம் மானிலத் தெங்கும்

---

364. வரிக்கல்—நீளமாக அடித்துத் திருத்திய கல்.
376. வாசிறை மீண்டான் - ஒருவகை நெல்.

ஒருவ ரேனும் உண்டோ? ஐயா!
மூச்சை யடக்கி முக்குளி போட்டுக்
கீழுலகம் போய்க் கிடைத்த சிப்பியை
வாரி யெடுத்து மேலே வந்திடும்
முழுக்கா ளியினிடம் முத்தொன் றேனும்
இருப்பதும் உண்டோ? எண்ணிப் பாரும்!
படிப்பிலார் தேடும் பற்பல பொருளும்
படித்தவர் வீட்டையே பார்த்துச் செல்லும்;
மூடர் முதலெலாம் வக்கீல் முதலாம்;
ஐயம் இதற்கிலை, ஐயம் இதற்கிலை;
ஐயா! ராஜி ஆவதே உத்தமம்!
ஐயா! ராஜி ஆவதே உத்தமம்!
மருமக் கள்வழி வழங்கும்இந் நாட்டில்
வீடுவீ டாயொரு கோடிருந் தாலும்,
வழக்குகட்கு ஓய்வு வருமோ ஐயா?''
என்றுஇவை யெல்லாம் எடுத்துச் சொல்லி
இறங்கிப் போனார். இக்கதை யெல்லாம்
நாலாம் மனைவி நாடகக் காரியின்
மாமன் மகன்ஒரு வக்கீல் குமஸ்தன்
அறிந்து வந்தான்: "அண்ணே! அந்த
வெள்ளையம் பிள்ளைக்கு வேலை யில்லை;
காடு கூப்பிடுது காலம் வரவில்லை;

---

393. முழுக்காளி—முத்துக் குளிப்பவன்.

397. மூடர்களால் வக்கீல்கள் செல்வராகிறாகள் என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி (Fools make the lawyers rich).

402. கோடி—கோர்ட்டு

410-411. 'காடு வாவா என்கிறது வீடு போ போ என் கிறது' என்பது ஒரு பழமொழி.

வீடுபோக் கிடுது! வேளைவர வில்லை!
கூனக் கிழவன் கோர்ட்டு வழக்கில்
என்ன அறிவான்? இவன்பேச் சையும்ஒரு
காரிய மாகக் கருதிட லாமோ?
செல்வமும் கல்வியும் செழித்த நாட்டில்,
வியாபா ரங்கள் மிகுந்த நாட்டில்
உழைப்புகள் பற்பல ஓங்கிய நாட்டில்
வழக்குகள் நிதமும் வளர்ந்து வருவது
சகஜம் என்று ஸ்தாபித் திடநான்
'அத்தா ரிட்டிகள்' ஆயிரம் காட்டுவேன்.
அண்டப் புரட்டன் வக்கீல், என்ன
ஆளைத் தூக்கி விழுங்கிடு வாரோ?
இவர்வீச் செல்லாம் யாரிடம் செல்லும்?
ஏழை, பாவம் யாவ ரேனும்
வந்தால், கொஞ்சம் வாலை முறுக்குவார்;
அன்றி,
பதிவு சாக்ஷி பலவேசம் பிள்ளை
கூட்டா ளிகளைக் கூட்டிற் கண்டால்
வாயைத் திறவார், மௌனம் கொள்வார்;

---

420. அத்தாரிட்டி - அத்தாட்சி, ஆதாரம்.

427. பதிவு சாக்ஷி: லஞ்சம் வாங்கிக்கொண்டு முன்பின் தெரியாத எந்தப் பத்திரத்திலும் சாக்ஷிக் கையெழுத்துப் போடவும், சாக்ஷி சொல்லவும் தயாராயிருப்பவன்.

பலவேசம் பிள்ளை: இப்பெயரைப் 'பலவேஷம் பிள்ளை' எனக் கொள்ளவேண்டும்; இவர், லஞ்சம் பெற்றுக்கொண்டு, யார் யாருக்கு எந்த எந்த விதமாகச் சாட்சியம் சொல்ல வேண்டுமோ, அந்தந்த விதமாகக் கோர்ட்டில் சொல்லத் துணிந்திருப்பவர் என்பது கருத்து.

பேடியைக் கண்ட பீஷ்மரும் ஆவார்;
அண்டமும் கோழி அண்ட மாய்விடும்;
உருட்டும் புரட்டும் ஒழிந்து போய்விடும்;
அண்ணன் எதற்கும் அஞ்ச வேண்டாம்;
எதுவந் தாலும் யான்இருக் கின்றேன்;
என்னை,

அண்ணன் நன்றாய் அறிய மாட்டீர்,
இந்து லாவில் எழுத்துக்கள் இத்தனை,
மகம்மது லாவில் வரிகள் இத்தனை
என்று சொல்ல எனக்குத் தெரியும்.
தி. பி. கோ. வைத் திருப்பித் திருப்பிப்

பாரா இரவும் பகலும் இல்லை.
சுருக்கி உம்மிடம் சொன்னால் போதுமே!
சட்ட மெனக்குத் தலைகீழாய்த் தெரியும்;
நடைபடி யெல்லாம் நன்றாய்த் தெரியும்,
இரண்டு கையால் எழுதத் தெரியும்;

---

430. பேடியைக் கண்ட பீஷ்மர்: உத்தம வீரரான பீஷ்மர் பேடிமீது அம்பு தொடுக்கமாட்டார். அவரைப் போரில் ஒருவராலும் வெல்ல முடியாதிருந்த நிலையில், ஒரு பேடியை முன் நிறுத்தி, அருச்சுனன் அவரை வென்றான் என்பது பாரத சரித்திரம்.

440. தி. பி. கோ.—திருவிதாங்கூர் பினல் கோட் (குற்ற விசாரணைச் சட்டம்.)

443. தலைகீழாய்: மிக நன்றாக என்றும், மாறுபாடாக என்றும் இருபொருள் தொனிக்கும்.

444. நடைபடி : கோர்ட்டு நடவடிக்கை முறைகள் என்றும், கோர்ட்டு வாசல் நடை, அதன் படிகள் என்றும் இருபொருள்.

அரைநிமி ஷத்தில் அநியா யங்கள்
ஐம்பத்தைக் கோட்டில் ஆக்கத் தெரியும்;
பட்டிகை எழுதப் பாரம் போடக்
கெட்டி கெட்டி என்றுபேர் கேட்ட
ஏட்டுக் குமஸ்தன் யானே யாவேன்;
சாடைக் காட்டிச் சாட்சி களுக்குத்
தெரியாத காரியம் தெரியச் செய்ய
என்னைப் போல்இங்கு யாருண்டு? ஐயா!
கட்சிகள் வந்துஎன் கையில் தந்த
பணத்தைச் சொந்தப் பணம்போல் எண்ணி
வாங்கிப் பெட்டியில் வைத்துக் கொள்வேன்;
சிறிது மோசஞ் செய்திட மாட்டேன்;
வக்கீல் குமஸ்தன் சத்திய வாசகன்,
இன்னார் என்றுஇந் நாடெலாம் அறியும்,
ராஜியும் வேண்டாம் கீஜியும் வேண்டாம்,
நானே கேஸு நடத்தி ஜயமும்
வாங்கித் தருகிறேன் மலைக்க வேண்டாம்;
என்
வக்கீல் பேர்க்குஒரு வக்கா லத்தை

---

446. அநியாயம் : பிராது என்றும், நியாயக்கேடு என்றும் இருபொருள்.

450. ஏட்டுக்குமஸ்தன் — தலைமைக் குமஸ்தா (Head clerk).

457. சிறிது மோசம் : சிறிதுகூட மோசம் செய்ய மாட்டேன் என்றும், சிறிய மோசம் செய்யாமல் பெரிய மோசமே செய்வேன் என்றும் இருபொருள்.

458. சத்திய வாசகன்: சொல் (அதாவது வாசகம்) மட்டுமே சத்தியம். செயல் முற்றிலும் பொய்யும் புரட்டும் என்பது கருத்து.

எழுதிப் போடும்'' என்றெலாம் சொல்லி
இந்திர சாலம் மந்திர சாலம்
மகேந்திர சாலமும் வல்லஇம் மனிதன்
நாட்பண மாக நாலு ரூபாயும்
வக்கா லத்தும் வாங்கிச் சென்றான்;
'அர்ஜி கொடுத்தேன், அவதி மாற்றினேன்.
பிரதி யுத்தரமும் பேஷாய்க் கொடுத்தேன்.
கேஸில் ஜயமும் கிடைக்கும் நிச்சயம்'
என்று வார்த்தைகள் இதமாய்க் கூறி,
இடையிடை ரூபாய் இருபது முப்பது
தட்டிக் கொள்வான்; (தலைவிதி! தலைவிதி!)
கொடுத்துவைத் தவர்கள் கொண்டுபோ னார்கள்;
என்விதி யானும் இப்படி யானேன்;
நாகைக் கோர்ட்டில் கேஸு நடந்தது;
நடந்தது நடந்தது நாலரை வருஷம்;
ஐயோ தெய்வமே! ஐயோ தெய்வமே!
இரவும் பகலும் இன்றிஎன் கணவர்
பட்டபாடெலாம் பகர்வதும் எளிதோ?
திங்கட் கிழமை தெரிசனம் போச்சு
திண்டாட் டங்கள் தீரா தாச்சு!
வெள்ளிக் கிழமை விரதம் போச்சு
விவகா ரங்கள் மிகவே யாச்சு!
குளியும் போச்சு கும்பிடும் போச்சு
கோர்ட்டு வாசல் குடியிருப் பாச்சு!
மாதாங் தங்கள் மறந்தே போச்சு

470. அர்ஜி - பிராது, மனு, அவதி - வாய்தா.

489. மாதாந்தங்கள்: ஒவ்வொரு மாதக் கடைசியிலும் குறிப்பிட்ட ஒரு தினத்தில் ஏதேனுமோர் ஆலயத்துக்குச் சுவாமி தரிசனம் செய்யப்போகும் வழக்கம்.

வக்கீ லாபீஸ் வாழிடம் ஆச்சு!
உயர்ந்த மேடை உறைவிடம் போச்சு!
ஒட்டுத் திண்ணை உறங்கிட மாச்சு!
மெத்தை திண்டு விதானம் போச்சு,
விரிக்கும் பாய்அவர் மேல்முண் டாச்சு!
துப்பட் டாவும் தொங்கலும் போச்சு,
துவர்த்து முண்டும் துணியுமே யாச்சு!
புட்டும் பழமும் காப்பியும் போச்சு;
புளித்த காடியே போதுமென் றாச்சு!
தோசை இட்டிலி தோய்ப்பனும் போச்சு,
தொந்தியும் கரைந்து சுருங்குவ தாச்சு!
சுகந்தத் தூளும் சோப்பும் போச்சு,
சும்மா சிரங்கு சொறிவது மாச்சு;
சீலைக் குடையும் செருப்பும் போச்சு,
தினமும் வெயிலில் திரிவது மாச்சு!
அரைவண் டியுமாடும் அனைத்தும் போச்சு,
அஞ்ச லோட்டம் அவர்க்கே யாச்சு!
மட்டிக் கவலை மனங்குடி கொண்டது,
அளவிலாத் துன்பம் அடிமை செய்தது!
ஐயோ! யாங்கள் அனைவரும் அந்நாள்
அடைந்த துயரெலாம் யாரே அறிவார்?

---

496. துவர்த்து முண்டு - ஈரந் துவட்டுவதற்குரிய துண்டு.

497. புட்டு - பிட்டு.

499. தோய்ப்பன்: ஒருவகைப் பலகாரம்.

506. அஞ்சலோட்டம் - தபால் சுமந்து செல்லும் அஞ்சற்காரன் ஓடும் ஓட்டம்.

**வேறு**

குலக்குறத்தி வரினுமொரு
கோடங்கி வரினும்
குறிகேட்டுப் பொருள்விரித்துக்
கொண்டிருந்தோம், அம்மா!
துலக்கமுறப் பரல்பரத்திச்
சோசியர்கள் கணித்துச்
சொன்னவைகள் உண்மையென்று
துணிந்திருந்தோம், அம்மா! 1

பதியிருக்கும் பதியெங்கும்
பதிவாகச் சென்று
பால்வைத்துக் கணக்குகளும்
பார்த்து வந்தோம், அம்மா!
கதிகிடைக்கும் எனக்காளி
கொடைநடக்கும் காலம்
கடாத்தறித்துப் பொங்கலிட்டுக்
காத்திருந்தோம், அம்மா! 2

குறத்திசொன்ன குறியெல்லாம்
குறிதவறிப் போச்சே!
கோடங்கி குறியாலும்
குணமில்லா தாச்சே!

---

1. அம்மா: விளி; இவ்வரலாற்றைச் சொல்லிவரும்
பெண் மற்றொரு பெண்ணை அம்மா என விளித்துக் கூறு
கிறாள். கோடங்கி - குடுகுடுப்பைக்காரன்.

2. கடாத் தறித்து - கடாவைப் பலியிட்டு.

2-4. நாராயணசாமி பதிகள் அல்லது கோயில்களை
நாஞ்சில் நாட்டிலுள்ள பல ஊர்களிலும் காணலாம். அப்
பதிகளில் சிறப்பு நடத்துவதற்குப் 'பால் வைத்தல்' என்று
பெயர். பதி கொண்டாடி சன்னதம் கொண்டு அடிமை
களுக்கு வருங்காரியம் கூறுவது 'கணக்குப் பார்த்தல்'
எனப்படும்.

நிறுத்துரைக்கும் நிமித்திகரின்
நிமித்தங்கள் இந்நாள்
நினைக்கும்போ துளம்வெந்து
நீறாகு தம்மா! 3

பதித்தலத்துப் பால்வைத்தும்
பயனடைந்தோ மில்லை!
பலிகொடுத்தும் தேவிஅருள்
பாலித்தா ளில்லை!
விதித்தவிதி தான்இருக்க
வேறுவிதி வருமோ!
விம்மியினி அழுவதெலாம்
வீணலவோ அம்மா! 4

**வேறு**

இப்பெரும் கஷ்டம் யாரே படுவர்?
கணவர்.
அல்லும் பகலும் அலைந்து சடைத்தார்,
எலும்பும் தோலு மாக இளைத்தார்,
இருமல் இழுப்புக்கு இருப்பிட மானார்;
எதிலும் விருப்பம் இல்லா தானார்;
வெளியூர்ப் போக்கை விட்டே விட்டார்;
உள்ளூர் மட்டும் உலாவி வந்தார்;
சிலநாள் பின்னும் செல்லச் செல்ல
தெருவில் மாத்திரம் திரிவா ராயினர்;
படிப்படி யாய்இப் படியவர் பாடு
குறைந்து குறைந்து கொண்டே வந்தது;
அண்டைவீ டாகி, அறைப்புரை யாகி,
படிப்புரை யாகிப் பாயிலும் ஆனார்;
எழுந்து நடக்க இயலா தானார்;
நடந்தவர் கீழே கிடந்தா ரம்மா!

# 10. யாத்திரைப் படலம்

மூன்று மாதம் முன்ன தாகவே
மனைவியர் இருவர் மாண்டு போயினார்;
நாலாம் மனைவி நாடகக் காரியும்
விடுமுறி போட்டு விலகி விட்டனள்.
ஒருத்தி, பாவம், ஒருகதி யில்லாள்
நான்கு பிள்ளை நமனுக்குக் கொடுத்தாள்,
பெற்றும் மலடி, பேசா மடந்தை,
எனக்குத் துணையாய் இருந்தாள் அம்மா!
எழுந்து நடக்க இயலா தாகிப்
பாயிற் காணவர் படுத்தநாள் தொட்டு
அடைந்த துயரெலாம் அறிபவர் யரோ?
ஒருநாள்,
தீனம் என்ற செய்தி யறிந்து
மருமகன் வந்தான், வாயிலில் நின்றான்;
எட்டிப் பார்த்தான், இனிஇவர் என்றும்

---

3. விடுமுறி - கணவனும் மனைவியும் பிரிந்துகொள்வதைக் குறிக்கும் பிரமாண பத்திரம்.

5. ஒருத்தி - மற்றொரு மனைவி.

13. தீனம் - நோய்; உடல் நலமின்மை.

எழுந்திருப் பதுவு மிலையெனத் தேர்ந்தான்,
அண்டையிற் சென்றான், அழவும் செய்தான்;
'என்ன வேண்டுவது?' என்று கேட்டான்!
பக்கத் திருந்த பாவிகள், யாங்கள்
இருவரும் ஏங்கி இரங்கி யழுதோம்;
கண்ட மக்களும் கதறி யழுதனர்;
புருஷனும் இதனைப் பொறுக்கமாட் டாமல்,
அருகில் நின்ற மருகனை நோக்கி,
"அப்பா! வாடா, அண்டையில் இருடா,
நாச காலர் நாலைந்து பேர்கள்
கூடி நம்மைக் கோர்ட்டில் நாடகம்
ஆடும் படியாய் ஆக்கி விட்டனர்.
போகட்டும், போகட்டும், போனது போகட்டும்.
இன்றோ நாளையோ இப்பொழு தோஎன்று
எனக்கும் காலம் இறுகி விட்டது.
இதுநாள் வரையில், யான்என் மனைவி
மக்களுக்கு என்றொரு வஸ்து வாகிலும்
கொடுத்தது மில்லை; குடியிருப் பதற்கு
வீடும் அவர்க்கு வேறிலை, அப்பா!
தங்கத்தை நீயே தாலி கட்டினால்,
கவலை யின்றிக் கட்டையை விடுவேன்.
அவளும் சமைந்து ஈராண்டுகள் ஆச்சுது;
கண்ணால் உங்கள் கல்யா ணத்தைக்
காண்பனோ? தெய்வ கடாக்ஷம் எப்படியோ?
அத்தைமார் இவர்கள் அல்லும் பகலும்
படும்பா டுகள்நீ பார்க்க வில்லையோ?

---

30. இறுகிவிட்டது - முடிவு நெருங்கிவிட்டது.
35. தங்கம் - அவருடைய பெண்ணின் பெயர்.

அப்பா! இவரை ஆதரித்து என்றும்
காப்பாற் றுவதுஉன் கடமை யல்லவோ?
பயலையும் நீகண் பார்த்துக்கொள், ஐயா!
படிப்பான் கருத்தாய், பணந்தான் இல்லை,
பரீக்ஷை கொடுத்துப் பாஸாய் வரஇனும்
ஐந்து வருஷம் ஆகும்,அப் பொழுதுஉன்
தங்கை வயதும் சரியாய் வந்திடும்.
மேற்கா ரியம்உன் விருப்பம் போலச்
செய்துகொள், நீ தெரிந்தது தானே?

இந்த
ஊரி லுள்ள ஒருபய லாவது
நல்லவன் என்றுநீ நம்பி விடாதே
கொஞ்சம் இடம்நீ கொடுத்தா யானால்,
உள்ளதை யெல்லாம் ஒன்றில் லாமல்
கொள்ளை யடித்துக் கொண்டுபோய் விடுவான்.
நச்சு வித்துகள்! நச்சு வித்துகள்!
நம்பல் ஆகாது! நம்பல் ஆகாது!
என்னடா, அப்பா? என்ன செய்யட்டும்?
வயித்தியன் ஒழுங்காய் வருகிறா னில்லை;
தக்க மருந்தும் தருகிறா னில்லை;
பணம்பணம் என்று பதைத்துச் சாகிறான்
எழுந்திருப் பதுவும் இனியிலை; ஆயினும்,
ஆட்டு லேகியம் கூட்டித் தின்றால்
சுகம்வரு மென்று சொல்லு கிறார்கள்;
கையிற் பணமிலை, கடன்தரு வாரிலை;

---

44. பயல் - அவருடைய மகன்.

46. வரஇனும் - வர இன்னும்.

வழக்கில் முதலை வாரி யெறிந்தேன்;
கிழக்கு மேற்காய்க் கிடக்கின்றேன் இதோ!
என்ன செய்யலாம்? யாரை நோகலாம்?''
என்றுஇம் மொழிகள் இசைப்பது கேட்டு, அவர்
கூடப் பிறந்துஉயிர் கொள்ளும் வியாதிபோல்,
அருமை மதினி ஆங்கார வல்லி
காந்தாரி யம்மை கடுகி வந்தாள்.
மகனை நோக்கி, ''மடையா, மூடா!
முருக்குத் தடிபோல் வளர்ந்தமுட் டாளே!
ஐயா உன்னிடம் சொல்லி அனுப்பின
செய்திகள் என்ன? நீ செய்வதிங்கு என்ன?
நீயும்,
ஆண்பிள்ளை யோடா? அவலட் சணமே!
அத்தைமார் கூட அழஇருந் தனையோ?
அவர்,
கைவிஷம் கொடுத்துக் கணவனைக் கைவசம்
ஆக்க நினைத்த அரக்கிகள் அல்லவோ?
வருஷம்•ஐந்தாய் வழக்கும் சண்டையும்
மூட்டி விட்ட முண்டைகள் அல்லவோ?
நினைத்த காரியம் நிமிஷம் முடிப்பரே!
மாய வல்லிகள் வலையில் நீயும்
விழுந்துவிட் டாயோ? வெட்கம்! வெட்கம்!
போதும் எழுந்திரு! போதும்! போதும்!

---

67. முதலை-தன்னகப் பொருளை.

71. 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்பது மூதுரை.

76. ஐயா-அவளுடைய கணவன்; கேட்ட பைய னுடைய தந்தை.

அரங்குக் கதவை அடைத்துப் பூட்டிவை;
தட்டுக் கதவையும் சங்கிலி யிட்டுவை;
சாய்ப்புக் கதவிலும் தாழைப் போட்டுவை;
பொதிய மலையும் பொட்டண மாகிப்
புழைக்கடை வழியாய்ப் போய்விடும், அப்பா!
ஐயா வரும்வரை அங்கே நீதான்
கருத்தாய் நின்று காத்திட வேண்டும்.
இந்தா பூட்டுகள், இவையும் போதுமா?
அதிகம் வேண்டுமோ? அறிந்துசொல் அப்பா!''
என்றுஇப் படியாய் எக்கா ரியங்களும்
சரியாய்ப் பார்த்துச் சட்டம் கட்டி,
அரங்கு நடையின் அருகாய் ஓர்மலைப்
பாம்பு போலப் படுத்துக் கொண்டாள்.
நினைக்க நினைக்கஎன் நெஞ்சு வேகுதே!
ஐயோ! சிவசிவ! அரஹர! அரஹர!
போதும், போதும், இச்சன்மம் போதும்!
பட்ட துயரமும் பாடும் போதும்;
கணவர்க்கு அந்திய காலம், தண்ணீர்
குடிக்கும் பாத்திரம் குடுக்கை யானதும்,
பரந்த சட்டி படிக்க மானதும்,
பாலும் அன்னப் பாலே யானதும்,இனி
எடுத்துச் சொல்வது ஏனோ? அம்மா!
மருமக் கள்வழி வந்து பிறந்தவர்க்கு
ஏதும் புதுமை இவற்றில் உண்டோ?

---

90-92. அரங்கு-தட்டு. சாய்ப்பு-வீட்டின் பாகங்கள்.
91. தட்டு-மேல்மாடி.
94. புழைக்கடை-புறக்கடை; வீட்டின் பின் வாயிற் புறம்.
110. அன்னப் பால்-உலையிலுள்ள கொதி நீர், கஞ்சி

ஈனாப் பேச்சிபோல் எங்களை வெருட்டின
மதினியின் மீதும் வருத்தமொன் றில்லை.
காயம் மணக்குமோ? காஞ்சிரம் இனிக்குமோ?
இயற்கையை மாற்ற யாரால் முடியும்?
இவையெலாம் அல்ல, என்றென் றைக்குமென்
மனத்தி லிருந்து வாளா யறுப்பது,
நெஞ்சி லிருந்து நெருப்பா யெரிவது,
மற்று அக்காரியம் வையக மெல்லாம்
அறியும் படியான் அறைவேன், அம்மா!
கணவரின் மரண காலத்து அங்கு
வந்திருந் தவர்என் மகனை நோக்கி,
"தம்பி!உன் தந்தை தலைமாட் டிருந்து
திருவா சகத்தில் சிற்சில பதிகம்
படி"யெனச் சொல்லிப் பண்ணை வீட்டி
லிருந்துஒரு புத்தகம் எடுத்துக் கொடுத்தனர்.
பயலும் அதனைத் திறந்து பார்த்தான்.
'ஆரே தமிழை அறிபவர்?' என்றான்;
'பள்ளியில் தமிழும் படித்தேனோ?' என்றான்;
'பரீக்ஷையில் தமிழொரு பாடமோ?' என்றான்;
'என்னால் படிக்க இயலாது' என்னச்
சுவரிற் சாய்ந்து சும்மா இருந்தான்.
ஐயோ!

114. ஈனாப் பேச்சி - மகவு பெறாத பேய்ச்சி; ஒரு பிசாசு. ஈனா அரக்கி என்றும் சொல்வர்.

130-5. கொஞ்ச காலத்துக்கு முன், திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் தமிழர் வாழும் நாடான நாஞ்சில் நாட்டி லுங்கூட, பாடசாலைகளில் மலையாளமொழியே கற்பித்து வந்தார்கள். ஆரம்பக் கல்வியும் தமிழிலே கிடையாது; மலையாளத்தில்தான். இது காரணமாக இந்தப் பைய னுக்குத் தமிழே படிக்கத் தெரியவில்லை.

அப்பன் மரணம் அடையுங் காலம்
எமவே தனைகள் இல்லா தாக்கவும்,
சிந்தை சிவனடி சேரச் செய்யவும்,
செந்தமிழ் மறையாந் திருவா சகத்தைப்
பக்க மிருந்து படிக்க அறியா
மக்கள் படிப்பை வையகம் மதிக்குமோ?
நாஞ்சி னாட்டில் நல்லஆண் பிள்ளை
இல்லா ததனால் இப்படி யாச்சுது!
மலையா ளத்தில் வரைந்திடும் கோர்ட்டு
சமன்ஸு வந்தால் சரியாய்ப் படித்துக்
காட்டுவ தோபெருங் காரியம் அம்மா!
ஈசன் கழலுக்கு எமையா ளாக்கும்
புண்ணிய நூல்களைப் புறக்கணித் திடுதல்
அறிவோ? அழகோ? ஆண்மையோ? அம்மா!
பண்டு தொட்டுப் பரம்பரை யாக
முன்னோர் வைத்த முழுமணிப் பூணெலாம்
ஆசை யோடணிந்து அழகுபா ராமல்,
பாசிக் காகவும் பளிங்குக் காகவும்

---

136 - 141. பெரியவர்கள் இறந்து போகும்போது அவர்களுடைய மனம் ஆண்டவனுடைய திருவடிகளை நினைக்கச் செய்யும் பொருட்டு, அருகிலிருந்து யாரேனும் திருவாசகப் பாடல்களை ஓதுவது இன்றும் தமிழ்நாட்டிலே பெரு வழக்காயுள்ளது. தனது மகன், தந்தையின் மரண காலத்தில் அருகிலிருந்து திருவாசகம் வாசிக்கக்கூட முடியவில்லையே, அவன் பள்ளிப் படிப்பு அவ்வளவு பயனற்றதாய்ப் போய் விட்டதே என்று, அதை அப்பெண் நிந்தித்துக் கூறுகிறாள். இந்த நிலைமை இக்காலத்தில் மாறிவிட்டது; நாஞ்சில் நாட்டில் மட்டுமன்றி, மலையாள நாட்டிலும் கூட, சில இடங்களில் தமிழ்ப் பாடசாலைகள் நடந்துவருகின்றன.

கூச்ச மின்றியோர் குச்சுக் கடைபோய்க்
காத்துநிற் பவரைக் காசினி கண்டு
சீசீ யென்று சிரித்தி டாதோ?
பைத்திய மென்று பழித்தி டாதோ?
அன்னை யாக்கிய அமுதினை உண்ணாது
அண்டை வீட்டுக் கூழை யலந்து
வாரி யுண்டு வயிறு நிரப்பும்
மதியும் என்ன மதியோ? அம்மா!
நாஞ்சி னாட்டில் நடப்பவை யெல்லாம்
அதிசயம்! அதிசயம்! அதிசயம், அம்மா!
பாவம்! சாமியும் சுவரிற் சாய்ந்து, கண்ணீர்
மாலை மாலையாய் வடித்தங் கிருந்தான்
இந்தச் சமயம், உங்கள்புண் ணியத்தால்,
உலகெலாம் புகழும் உமையொரு பாகத்
தேசிகன் பாற்சிவ தீக்ஷை பெற்றவர்—
நெற்றி நிறைந்த நீற்றுப் பூச்சினர்
கழுத்து நிறைந்த கண்டிகை யணிந்தவர்

---

159. அலந்து - ஆசைப்பட்டு.

167 - 8. உமையொருபாகத் தேசிகர், ஆசிரியருக்குச் சிவதீக்ஷை செய்து வைத்த பெரியவர். இவரது மடம் சீவைகுண்டத்திலும், தேரூரையடுத்த வாணன்திட்டு முதலிய பல இடங்களிலும் உண்டு. அங்கு சைவ போதனை முதலிய தருமங்கள் இன்றும் நடைபெற்று வருகின்றன.

ஸ்ரீ தேசிகரிடம் ஆசிரியர் சிவதீக்ஷை பெற்றுக்கொண்ட போது பாடிய ஒரு பாடல் வருமாறு:

வேறும் ஒருதுணையான் லேண்டுவனோ வேணுவனம்
தேறுமுமை யோர்பாகத் தேசிகனே—கூறுமெமக்கு
எய்யாப் பிறவி இருளகல நீயளித்த
பாயெய்யா விளக்கிருக்கும் போது.

உலர்ந்து பழுத்த உடையை உடுத்தவர்
தளர்ந்த நடையினர் சாந்தம் உடையவர்
கண்டவர் தொழத்தகு காட்சி கொண்டவர்
மாணிக்க வாசகர் வழங்கிய மணியெலாம்
பேணித் தம்உளப் பெட்டியில் வைத்துத்
தினந்தினம் எம்மான் திருவடி சார்த்திப்
பணியுந் தொண்டர்—பாக்கியம் பிள்ளைப்
பாட்டா வந்தனர்; படிப்புரை யிருந்தவர்
வேண்டிய காரியம் விளம்பக் கேட்டு,
உரைத்த நாத்தேன் ஊறி யெழவும்
உள்ளமும் செவியும் ஒருங்கு குளிரவும்,
திருத்த மாகத் திருவாச கத்தில்
பற்பல பதிகமும் பண்ணோடு ஓதினர்,
இப்படி அவரும் யாத்திரைப் பத்தில்,

---

178. பாட்டா: பாட்டனார், தாத்தா. படிப்புரை— வீட்டின் முன்பக்கம் உள்ள குறடு; படிப்புரையை ஒட்டுத் திண்ணை என்றும் சொல்வது உண்டு. நாஞ்சில் நாட்டில் பெரும்பாலான வீடுகளும், வீட்டின் முன்புறம் திறந்தவெளி முற்றமும் அதனைச் சுற்றிலும் படிப்புரையுமாகவே அமைந் திருக்கும்.

182. திருவாசகத்தில் பற்பல பதிகம்: பதிகம் என்பது தெய்வத்தைப்பற்றிப் பெரும்பாலும் பத்துச் செய்யுள் களால் பாடப்படும் பிரபந்தம். தேவாரப் பாடல்களைத் தான் பதிகம் என்று சொல்வது வழக்கம். திருவாசகப் பாடல்களைப் பதிகம் என்று சொல்வது இல்லை. இரண்டிற் கும் வேறுபாடு தெரியாமையால், இப்பெண்மணி பதிகம் என்று உரைக்கின்றாள்.

'போவோம் காலம் வந்தது காண்
பொய்விட் டுடையான் கழல் புகவே'
என்ற பாகம் எடுத்துக் கூறவே,
கணவர்,
ஏங்கி யழுத எங்களை நோக்கினர்,
வாடி யழுத மக்களை நோக்கினர்,
கடவுளை எண்ணிக் கையை எடுத்தனர்;
கண்ணை மூடினர், கயிலை போய்ச்சேர்ந்தனர்.

---

185 - 186. யாத்திரைப்பத்தில் இங்குக் குறிக்கப்பட்ட பாடல். அதன் தொடக்கப் பாடல்:

“பூவார் சென்னி மன்னனெம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவாது உள்ளம் கலந்துணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா என்னப் பட்டு அன்பாய்
ஆட்பட் டீர்வந்து ஒருப்படுமின்
போவோம் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே.”

பூவார் - பூக்கள் நிறைந்த; புயங்கப் பெருமான் - சர்ப்பாபரணங்களை யுடையவன். புயங்கம் - பாம்பு; ஓவாது - ஒழியாது, இடைவிடாது; வெள்ளக்கருணை - மிகுந்த கருணை; ஆவா என்னப்பட்டு - ஆவா என்பது இரக்கத்தை உணர்த்துகின்றது. காலம் - செல்லுதற்குரிய காலம்; பொய்விட்டு - பொய்யான உடலை விட்டு, பொய் - நிலையற்ற உடம்பு.

## 11. கும்பியெரிச்சல் படலம்

... ... ... ...
... ... ... ...
தீரா வழக்கும் சென்மப் பகையும்
உற்றா ருக்குள் உண்டாக் கும்வழி
அப்பனைப் பிள்ளை அண்டவொட் டாவழி
பிள்ளையை அப்பன் பேணவொட் டாவழி
புருஷனை ம்னைவி போற்றவொட் டாவழி
மனைவியைப் புருஷன் மதிக்கவொட் டாவழி
அண்ணனைத் தம்பி அடுக்கவொட் டாவழி
தம்பியை அண்ணன் தரிக்கவொட் டாவழி
மருமகனை மாமன் வஞ்சித் திடுவழி
மாமனை மருமகன் வதைத்துக் கொலும்வழி
குடியை முடிக்கும் கொடிய தீவழி
அடிபிடி சண்டை அகலாப் பெருவழி
மனிதரைப் பேயாய் மாற்றும் பாழ்வழி;
எண்ணும் படியுடல் என்பெலாந் தெரியக்
கண்ணும் குழிந்து கன்னமும் ஒட்டி
வயிற்றுக் கின்றி வறுமையின் மெலிந்து
என்போல்
நடைபிணம் ஆயிரம் நடக்கும் வனவழி;

---

1 - 14. ஏட்டில் பொடிவு.

வெல்வழி, சற்றும் வெளிச்ச மிலாவழி
இருள்வழி செல்பவர் இடறும் கல்வழி
கூகையும் ஆந்தையும் குடிகொள்ளும் குகைவழி
நெஞ்சில் படர்ந்து நிரம்பிய முள்வழி;
'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வ'மென்று
ஔவை சொல்மொழி அறியா மடவழி;
பெற்ற பிதாதன் பிள்ளை கட்குப்
பழியும் பாவமும் பற்றிய நோயும்
அழியாப் பொருள்களாய் அளிப்ப தன்றி
ஒருகா சேனும் உதவாச் சதிவழி!
இது,
மக்கள் வழியென மதிக்கவொண் ணாது!
மருமக் கள்வழி யாகவு மாட்டாது;
இருவழி கட்கும் இடைவழி யாய்வரும்
வழியிது போல்இவ் வையகத்து எங்கும்
உண்டோ? அம்மா! உண்டோ? அம்மா!
வீடு விற்று விளைநிலம் விற்று,
ஆடு மாடுகள் அனைத்தும் விற்று,
குடிக்கும் செம்பு குழியலும் விற்று,
பாத்திரம் பண்டம் பலவும் விற்று,
தண்டை பாத சரங்களும் விற்று,
காப்புக் காறை கடுக்கனும் விற்று,
பதக்கம் சிற்றுருப் பாம்படம் விற்று,
தாலியை விற்றுப் பீலியை விற்று,

---

51. குழியல் - சாப்பிட உபயோகிக்கும் பாத்திரம்.

55. சிற்றுரு - கழுத்திலணியும் ஓர் ஆபரணம்; பாம்படம் - காதிலணியும் ஓர் ஆபரணம்.

56. பீலி - கால் விரல்களிலணியும் வெள்ளி அணி.

வக்கீல் சாமி மலரடி களிலும்
குமஸ்தா மாடன் கோயில் களிலும்
சாக்ஷித் தெய்வச் சன்னிதி களிலும்
பழங்தேங் காய்கள் படைப்புகள் வைத்தும்,
வேண்டிய புகையிலை வெற்றிலை வைத்தும்,
விதம்விதம் வேட்டிகள் முண்டுகள் வைத்தும்,
சேலை தாவணி சீட்டிகள் வைத்தும்,
இன்னும் பலவாறு இவர்க ளிடத்து
முன்னம் கொண்ட கடன்களை முற்றும்
குறைகூ றாது கொடுத்தும் முடிவில்
வழக்கை இழந்து வாய்மண் ணாகி,
உண்ண உணவும் உடுக்கத் துணியும்
இல்லா தாகி, யாரும் கைவிட,
முற்றத் துறந்த முனிபுங் கவர்போல்
பக்கப் பழுத்த பட்டினத் தடிகள்போல்
''உற்றார் சதமல, ஊரார் சதமல,
பெண்டிர் சதமல, பிள்ளையும் சதமல,
இப்பே ருலகில் யாரும் சதமல''
என்று கூறி இனித்தோ வாளைக்

---

71. பக்கப் பழுத்த - மிக்க வயதாகி உடல் பழுத்த.

72 - 4. பட்டினத்தடிகள் பாடல்: திருவேகம்பமாலை.

''ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப் பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்தாள் சதம் கச்சிஏ கம்பனே.''

75-76. தோவாளைக் கஞ்சிப்புரை: தோவாளை என்பது நாஞ்சில் நாட்டிலுள்ள ஓரூர். திருவிதாங்கூர் மன்னரால் இங்கே ஏழைகளுக்குக் கஞ்சி வார்க்கும் தருமம் முன்பு நடைபெற்று வந்தது.

கஞ்சிப் புரையே கதியெனச் சென்று,
பக்க மெங்கும் பரந்து சுற்றிச்
சுவான தேவர் துதித்து நிற்க,
அந்தரம் எங்கும் பந்தர் பேட்டுக்
காக்கைபா டினியர் கானம் பாட,
பழஅடி யார்கள் பலரொடும் கூடி
வெட்ட வெளியில் வெண்சோ றுண்டு,
பட்டைச் சோறும் பாற்சோ றாக
ஒட்டுத் திண்ணை உறங்கிட மாக
இருப்பதை நோக்கி இரங்கி, இரங்கி,
இழந்ததை எண்ணி ஏங்கி ஏங்கி,
அழுபவர் கண்ணீர் ஆறாய்ப் போம்வழி—
ஐயோ, இவ்வழி ஆகாது ஆகாது!
ஆடுகள் மாடுகட்கு ஆகும் இவ்வழி—
மனிதர் செல்லும் வழியா யிடுமோ?
... ... ... ...
... ... ... ...
கற்றவர் உளரோ! கற்றவர் உளரோ!
பெற்ற மக்களைப் பேணி வளர்த்திடாக்
கற்றவர் உளரோ! கற்றவர் உளரோ!!

---

77 - 88. ஏழை மக்கள் கும்பலாகக் கூடியிருந்து கஞ் குடிக்கும்போது, நாய்களும் காகங்களும் சுற்றி வட்டமிடுவ இவ்வடிகளில் குறிப்பிடப்படுகிறது.

78. சுவானதேவர் - நாய்கள்.

80. காக்கை பாடினியர் - ஒரு பழம் புலவர் பெயர்; இங்கே காகங்கள்.

91 - 2. ஏட்டில் பொடிவு.

அறிஞரும் உளரோ! அறிஞரும் உளரோ!
வறுமைக்கு இரையாய் மக்களை விட்டிடும்
அறிஞரும் உளரோ! அறிஞரும் உளரோ!
நீதியும் உளதோ! நீதியும் உளதோ!
மாதர் கண்ணீர் மாறா நிலத்தில்
நீதியும் உளதோ! நீதியும் உளதோ!
தெய்வமும் உளதோ! தெய்வமும் உளதோ!
பொய்வழிப் பொருளைப் போக்கும்இந் நிலத்தில்
தெய்வமும் உளதோ! தெய்வமும் உளதோ!!

**வெண்பா**

காரணவன்...தெப் போகல்யாணம் செய்வதெப்போ
வாரமிகு மக்களொடு வாழ்வதெப்போ—தாரணியில்
எல்லா ரையும்போல் இருப்பதெப்போ...
... ... நாம்.

**முற்றும்**

# பிற்சேர்க்கை

## 1. நாஞ்சில் நாட்டு வேளாள சகோதரர்களுக்கு ஒரு கோட்டை வினாக்கள்*

குறிப்பு : ஒவ்வொருவரும் கேள்விகளுக்கு விடை கண்டு மனச் சாக்ஷியைத் திருப்தி செய்துகொண்டால் போதுமானது.

1. ஓர் உத்தமமான மருமக்கள்வழிக் குடும்பத்தின் லக்ஷணங்கள் என்ன? நாஞ்சில் நாட்டில் எக்காலத்திலாவது அவ்விதக் குடும்பங்கள் ஏற்பட்டிருந்ததுண்டா?
2. குடும்பங்களின் நிலைமை முற்காலத்தில் எப்படியிருந்தது? தற்காலத்தில் எப்படி யிருக்கிறது? பல குடும்பங்களின் சரித்திரங்களையும் ஆராய்ந்து விடை நிதானிக்க.
3. நாஞ்சில் நாட்டு வேளாளர்—மருமக்கள்வழிக் குடும்பத்திற்கும், நாயர் — குடும்பத்திற்கும் வித்தியாஸம் உண்டா?
4. நாஞ்சில் நாட்டார் ஆதிகாலந்தொட்டே மருமக்கள் வழியை அனுசரித்து வருகிறார்களா, அல்லது இடைக்காலத்தில் அதைக் கைக்கொண்டிருப்பவர்களா? சரித்திர ஆதாரத்துடன் விடை காண்க.
5. தம் தரவாட்டு க்ஷேமமொன்றையே முக்கிய ஜீவித நோக்கமாகக் கொண்டு உழைத்துவரும் காரணவர்கள், இப்பொழுது நாஞ்சில் நாட்டில் எத்தனை பேர் இருக்கக்கூடும்?

---

*ஒரு கோட்டை என்பது இருபத்தொரு மரக்கா[ல்] கொண்ட முகத்தலளவை. இது நாஞ்சில் நாடு, திருநெ[ல்] வேலிப் பிரதேசங்களில் இன்றும் நடைமுறையில் உள்ளது இருபத்தொரு கேள்விகள் அடங்கியிருப்பது கரு[தி] இவ்வினாக்களின் தொகுதி 'ஒரு கோட்டை வினாக்கள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வினாக்கள் தோன்றிய விவரம்பற்றி இந்நூல் முன்னுரையில் கூறியுள்ளது காண்க.

6. பொதுவாக ஒரு காரணவன் இருக்கும்போது குடும்பத்தின் செல்வ நிலை எப்படியிருக்கிறது? அவன் குடும்ப பரணம் கையேற்ற காலத்தில் இருந்ததை விட விருத்தியடைந்திருக்கிறதா? அல்லது மோசமாயிருக்கிறதா? காரணம் என்ன?
7. தகப்பனால் முன்வந்திருக்கும் மக்கள் அதிகமா? அல்லது காரணவனால் முன்வந்திருக்கும் மருமக்கள் அதிகமா? ஒவ்வொன்றிலும் நூற்றுக்கு எத்தனை வரும்?
8. நாஞ்சில் நாட்டில் பெரும்பாலரும் தகப்பனுடைய ஊரில் வீடுங்குடியுமாயிருக்கிறார்களா? அல்லது தங்கள் காரணவன் குடும்ப வீட்டில் இருக்கிறார்களா?
9. குடும்ப முதலைக் கறம்பி மக்களுக்குக் கொடுக்கும் காரணவர்களின் தொகை அதிகமா? அவ்வாறு கொடுக்காதவர்களின் தொகை அதிகமா?
10. வியவகாரமில்லாத குடும்பங்கள் நூற்றுக்கு எத்தனை வரும்?
11. காரணவனும் அநந்திரவர்களும் ரம்மியமாக இருக்கிற குடும்பங்கள் ஏதாவது இருக்கிறதா?
12. நாளுக்குநாள் பாகப் பிரமாணங்கள் அதிகப்பட்டுக் கொண்டு வருகிறதா? அல்லது குறைந்து கொண்டு வருகிறதா?
13. நூறு வருஷத்திற்கு இப்புறம் பாகமாகாத குடும்பங்கள் எத்தனை வரும்?
14. ஒருவனுக்கு மனைவி மக்கள்மீது அன்பு அதிகமாயிருக்குமா? அல்லது மருமக்கள்மீது அன்பு அதிகமாயிருக்குமா?
15. குடும்பத்தைப் பொறுத்துள்ள காரணவனது கடமைக்கும், அவனுக்கு இயற்கையாக மக்கள் மீது அமைந்துள்ள அன்பிற்கும் போராட்ட மேற்

படுமாயின் ஜெயிப்பது பெரும்பாலும் எதுவாயிருக்கக்கூடும். அன்பா? கடமையா?

18. காரணவனொழிந்த மற்றப் பேர்கள் சம்பாதிக்கும் பொருளைக் குடும்பப் பொது முதலோடு சேர்ப்பது உண்டா? சேர்ப்பதில்லையாயின் காரணமென்ன?

17. பொதுவாக நமது முன்னேற்றத்திற்கு மருமக்கள் வழி அனுகூலமாயிருக்கிறதா? பிரதிகூலமாயிருக்கிறதா?

18. **'நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியத்'**தால் தெளிவாகுந்தோஷங்கள் உண்மையானவைகளா? அல்லவா? அவற்றை நிவர்த்தி செய்ய வேண்டுவது அவசியமல்லவா?

19. உள்ளெல்லாம் அழுகிக் கொழுகொழுத்த முழுப் பூசனிக்காயா அல்லது அழுகாத நல்ல காயின் ஒரு துண்டா நமக்குப் பிரயோஜனமாவது?

20. பக்கக் கன்றுகள் தாய்வாழையைச் சுற்றி ஒன்றாக நின்றால் நன்றாய்க் குலைத்துப் பயன் தருமா? அல்லது அவற்றைத் தனித்தனியா யெடுத்து வைத்துப் பாதுகாத்தால் அவ்வாறு பயன் தருமா? நாற்று நடுவதில் முதலைக் குறைத்து வைத்து நடவேண்டும் என்பதன் கருத்து என்ன?

21. ஒரு பழைய வீடு; கூரை பிரிந்து கிடக்கிறது; சுவர் மலந்து நிற்கிறது; தளம் அவையான் அறுத்து பொங்தும், புடையுமாக இருக்கிறது; தேள், நட்டுவக்காலி, பாம்பு முதலிய விஷஜந்துக்கள் குடும்பத்தோடு குடியேறியிருக்கின்றன; இந்த வீட்டைப் பழுது பார்த்து முட்டுத்தட்டுகள் கொடுத்து நாம் வாசம் செய்தல் நல்லதா? அல்லது அடியோடு மாற்றிவிட்டுக் காலரீதிக்கு ஏற்றபடி வீடு கட்டி வாசம் செய்தல் நல்லதா?

# 2. சிறப்புப்பெயர் அகராதி

[எண்: படல எண், அடி எண்; வி. வ.—
விநாயகர் வணக்கம்; அ.—அவையடக்கம்
தா.—தாழிசை; வெ.—வெண்பா.]